ஜூலை 2002  Rs. 10/-

# அம்புலிமாமா

Vapa

# மணம் பரப்பும் பாதையில்...

சந்தன மரத்தை ஆச்சரியத்துடன் பார்த்தாள் சந்தனா. எத்தனை வயது முதிர்ந்தது! என்ன கம்பீரமாக நிற்கிறது! அபார மணத்தை அள்ளி வீசுகிறதே!



சந்தனாவின் முகத்தில் இருந்த வியர்க்குருவை கவனித்தது மரம்.

என்ன இது? நீ சந்தன சோப், பவுடர், குழம்பு எதையும் உபயோகப்படுத்துவது இல்லையா? 2000 வருடங்களுக்கு முன்னரே ஆயுர்வேத மருத்துவர்கள் வியர்க்குருவை குணப்படுத்த சந்தனம் தான் சிறந்தது என்று அறிந்திருந்தனர். காளிதாசர் எழுதிய 'ரிது சம்ஹார'த்தில் இளம்பெண்கள் உடலைக் குளிர்ச்சியாக வைத்திருக்கவும், சருமத்தைப் பாதுகாக்கவும், உடல் முழுவதும் சந்தனக் குழம்பைப் பூசிக் கொண்டார்கள் என்று கூறியுள்ளார்.



சந்தனத்தைப் பற்றிய குறிப்பு *திருக்தா* என்ற கி.மு. 5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வேத வர்ணனை, கி.மு.100-ல் எழுதப்பட்ட பதஞ்சலி முனிவரின் *மஹாபாஷ்யம்*, கி.மு.200-ல் எழுதப்பட்ட கௌடில்யரின் *அர்த்தசாஸ்திரம்*, *இராமாயணம்*, *மகாபாரதம்* போன்ற தொன்மையான இந்திய நூல்களில் காணப்படுகிறது.



## கமகமக்கும் கேள்விகள்

சந்தனத்தைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? இந்தக் கேள்விகளுக்கு விடையளித்தால் தெரிந்து விட்டுப் போகிறது.

1. சந்தன மரம் எந்தத் தாவர வகையைச் சேர்ந்தது? ஊசியிலை/இலையுதிர்/பசுமை மாறாக் காடுகள்
2. சந்தன மரத்தை வெட்டி/வேரோடு சாய்த்து அறுவடை செய்கிறார்கள்.
3. சந்தன எண்ணெய் அம்மரத்தின் பட்டை/உள்மரம்/இலைகளில் உள்ளது.
4. சந்தன மரம் முழுமையாக வளர்ச்சி பெற 10-20/60-70/100-120 வருடங்கள் ஆகிறது.

விடைகள்
1. ஊசியிலைக் காடுகள். 2. வேரோடு சாய்த்து. 3. உள்மரம், 4. 60-70



இந்தியப் புராதனக் கதைகள்

24



ராஜபக்தி

19



மர்மக்குளம்

11



விநாயகர்

45



# பொருளடக்கம்




SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

பரிசளிப்புச் சந்தா
இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120
புக்போஸ்டில்
உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

சென்னை
Ph: 044-234 7384
2347399
**e-mail : advertisements @chandamama.org**

டில்லி
மோனா பாட்டியா
Ph: 011-651 5111
656 5513/656 5516

மும்பை
ஷகீல் முல்லா
Mobile: 98203-02880
Ph: 022-266 1599
266 1946/265 3057

Introducing!

KOKA NAKA Milk Cookies
Now with Coconut and Milk !



Free!*
one
Fun
With Facts
book







The Real Coconut ... Enjoy

*
Send 20 wrappers of Nutrine Koka Naka to Nutrine Confectionery Co. P. Ltd., P.O.Box No. : 38,B.V.Reddy Colony, Chittoor 517 001 and get one Fun With Facts book Free!




India's largest selling sweets and toffees.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்**

# இந்திய மாவீரர்கள்-10

இந்திய இதிகாசங்களில் மாவீரர்கள் ஏராளமாய் இருந்திருக்கின்றனர். அவர்களில் எவ்வளவு பேர்களை இங்கு அறிவீர்கள்?

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1. தசரதனின் மைந்தர்களில் ஒருவனான நான் என் சகோதரனை பிறந்தது முதல் பிரிந்ததே இல்லை. நான் யார் தெரியுமா?

---------------------------------------------

2. எனது சாதுரியத்தால் எனது மருமகன்களை ஆபத்திலிருந்து காப்பாற்றியிருக்கிறேன். நானும் திருதராஷ்டிரனின் சகோதரன். நான் யார்?

---------------------------------------------

3. எனது சகோதரன் ராமனின் மனைவியை அபகரித்தான். நானோ போரில் ராமனுக்கு உதவினேன். என்னைத் தெரியுமா?

---------------------------------------------

4. வாயு தேவனின் மைந்தனான நான் பாண்டவர்களில் ஒருவன். என் பெயர் என்ன?

---------------------------------------------

5. நான் கழுகு. ராவணனால் சீதை தூக்கிச் செல்லப்பட்டபோது அவளைத் தேடி வந்த ராமனுக்கு அதைத் தெரிவித்தேன். என் பெயர் தெரியுமா?

---------------------------------------------

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த தேசிய மாவீரர்:..........................................

..........................................

..........................................

போட்டியாளரின் பெயர்: ..........................................

வயது:.................. வகுப்பு:..................................

முகவரி:..........................................

..........................................

பின்கோடு:........................ போன்:..........................

போட்டியாளரின் கையொப்பம்:..................................

பெற்றோரின் கையொப்பம்:..................................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-10**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி ஆகஸ்ட் 5, 2002

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டுமே.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

**இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்**





நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# நமக்குத் தேவை அமைதி, போர் அல்ல!

நாம் துன்பத்தின் எல்லையில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். எல்லையில் நடக்கும் சண்டையைப் பற்றிய செய்திகளை அன்றாடம் செய்தித் தாள்களில் படிக்கிறோம். போர் தொடுக்கும் நோக்கத்தில் தீவிரவாதம் கட்டவிழ்த்து விடப்படுகிறது என்று இந்திய-பாகிஸ்தான் தலைவர்கள் ஒருவரையொருவர் தாக்கி அறிக்கை விட்டுக் கொண்டிருக்கின்றனர்.

போரின் பலன் துயரமும் அழிவுமே என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். சண்டையின் காரணமாக காஷ்மீர எல்லையோர கிராமங்கள் வெறிச் சோடிக் கிடக்கின்றன. வாழ்நாள் முழுவதும் பாடுபட்டுச் சேர்த்த உடமைகளையும் வீட்டையும் விளைந்த பயிருள்ள வயல்களையும் வியாபாரிகள், விவசாயிகள் சரக்கேற்றிச் செல்லும் வண்டி ஒட்டுநர்கள் மற்றும் பலரின் அன்றாட வாழ்க்கைக்கு அடிப்படையான பலவகை தானியக் கிடங்குகளையும் விட்டு விட்டு திக்கற்ற நிலையில் நிற்கும் அந்த மக்களின் வருங்காலம் என்ன என்பதை நாம் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாது. போரினால் வீரர்கள் மட்டுமின்றி இடையில் சிக்கும் மக்களும் அல்லவா இறப்பார்கள்! போரின் விளைவால் விலைவாசி உயர்வும் பொருட்கள் தட்டுப்பாடும் தவிர்க்க முடியாததாகிவிடும்.

இன்று நமக்கு வேண்டியதெல்லாம் போர் அல்ல, அமைதி ஒன்றே! தடையாக உள்ள அடிப்படைக் காரணங்கள் நீங்கும்போது தான் அது உண்டாகும் என்று பண்டிதர் ஜவஹர்லால் நேரு கூறியிருக்கிறார். இரு நாடுகளின் முடிவில்லாத் துயரத்திற்கான அடிப்படைக் காரணத்தை நீக்க, ஐம்பது வருடங்களாக நிலவும் சந்தேகப் பேயையும் வெறுப்பையும் ஒழிக்கப் பாடுபட வேண்டும்.

இந்த மாதம் தனது ஆண்டு விழாவைக் கொண்டாடும் சந்தமாமா வருங்காலத் தலைமுறையினரின் நலனுக்காக இரு நாடுகளிலும் பாடுபடும் நல்ல உள்ளங்களுடன் சேர்ந்து அமைதி காக்க வேண்டுகோள் விடுக்கிறது.

---

ஆசிரியர் : விஸ்வம்
Visit us at : http://www.chandamama.org





# இலவச ஆலோசனை

சதாசிவம் பரம்பரைப் பணக்காரர். கிராமத்தில் யாருக்குக் கஷ்டம் வந்தாலும் அவர்கள் கிராம அதிகாரியுடன் வந்து சதாசிவத்திடம் ஆலோசனை கேட்பது வழக்கம். விபரங்களை நன்றாகக் கேட்டறிந்து தகுந்த ஆலோசனை கொடுத்து அவர்கள் கஷ்டத்தைப் போக்குவார். இதுபோல் எத்தனையோ பேர்களுக்கு அவர் உதவி புரிந்திருக்கிறார்.

அத்தகைய நபர்களுள் ராமதாசரும் ஒருவர். அவர் ஒரு வியாபாரி. ஒரு முறை அவரது தானிய மூட்டைகள் நனைந்து வீணானபோது அழுது புலம்பியபடி சதாசிவத்திடம் வந்தார். அப்பொழுது, ''ராமாவரம் என்ற கிராமத்திலுள்ள மக்கள் புழுங்கல் அரிசி தான் சாப்பிடுகிறார்கள். புழுக்குவதற்கு முன் நெல்லை நனைப்பார்கள். எனவே அவர்கள் இதை வாங்குவார்கள்,'' என்று சதாசிவம் ஆலோசனை கூறினார். அவரது ஆலோசனையினால் ராமதாசருக்கு ஆயிரம் ரூபாய் லாபம் கிடைத்தது.

மற்றொரு முறை ராமதாசர் ஒரு பணக்காரனுக்காக வைரமாலை ஒன்று செய்தார். அந்த மாலை அவனுக்குப் பிடிக்காததால் அதை வாங்க மறுத்துவிட்டான். இந்த விஷயத்தை சதாசிவத்திடம் ராமதாசர் சொன்ன போது ''ரத்னபுரியில் உள்ள ஜமீன்தார் விதவிதமான மாலைகளைச் சேகரிக்கிறார். அவரிடம் இதை விற்றுவிடுங்கள்,'' என்றார். அதன்படி ராமதாசருக்கு இரண்டாயிரம் ரூபாய் லாபம் கிடைத்தது.

- சிவானந்தம் -

ஒருநாள் இருபது வயதுடைய சந்திரன் என்ற திக்கற்ற இளைஞன் ராமதாசரிடம் தங்கி வேலை பார்ப் பதற்காக வந்தான். அவன் ஏமாற்றுக் காரன் என்று ஊரார் கூறினார்கள். ராமதாசருக்கோ வேலையாள் தேவை யாக இருந்தது. ஆனால் அவனை வீட்டில் தங்க வைக்கவும் பயந்தார். என்ன செய்வதென்று தெரி யாமல் சதாசிவத்திடம் ஆலோசனை கேட் டார். அதற்கு ''யாருமே கெட்ட வனாகவே பிறப்பதில்லை. அவனை நீ முழுவதுமாக நம்பினால் அவனும் உன்னிடம் விசுவாசமாக இருப் பான்,'' என்று சதாசிவம் சொன்னார்.

சந்திரனை ராமதாசர் வீட்டோடு வைத்துக் கொண்டார். ஒருநாள் அவன் இரண்டாயிரம் ரூபாய் எடுத் துக் கொண்டு மாயமாய் மறைந்தான்.

கோபம் கொண்ட ராமதாசர் சதா சிவத்திடம் வந்து, ''நீங்கள் சொன்ன தால் தான் நான் அவனை வீட்டில் தங்க வைத்தேன். அதனால் எனக்கு ஏற்பட்ட நஷ்டத்தை நீங்கள் தான் ஈடு செய்ய வேண்டும்,'' என்றார்.

இதற்கு சதாசிவம் ''ஆலோசனை சொல்வது தான் என் வேலை. பலன் நீ நடக்கும் முறையில் அமையும். நீ அவனை முழுவதுமாக நம்பியிருந் தால் அவனும் உன்னை ஏமாற்றி யிருக்க மாட்டான்,'' என்றார்.

ராமதாசர் இதை ஒப்புக் கொள்ளா மல், ''நீங்கள் எனக்கு நஷ்டஈடு தராவிட்டால் கிராம அதிகாரியிடம் புகார் செய்வேன்,'' என்றார். சதா சிவம் பதில் ஒன்றும் சொல்ல வில்லை. விஷயம் கிராம அதிகாரி யிடம் சென்றது.



'ராமதாசருக்கு சாதகமாகப் பதில் சொன்னால் சதாசிவம் இனிமேல் யாருக்குமே இலவச ஆலோசனை கூறமாட்டார். அது மற்றவர்களுக்கு நஷ்டமல்லவா?' என்று எண்ணிய படி கிராம அதிகாரி சதாசிவத்திடம் வந்து ''இந்தப் பிரச்சனையைத் தீர்க் கவும் நீங்களே ஆலோசனை சொல் லுங்கள். அதுவே ராமதாசருக்கும் ஒரு பாடமாக அமையும்,'' என்றார்.

சதாசிவம் ஒரு யோசனை சொன் னார். அதன்படி மறுநாள் ஊரார் அனைவரையும் கிராம அதிகாரி தன் வீட்டிற்கு வரவழைத்து விபரங்களை எடுத்துக் கூறினார். பின் ''ஏன் ராம தாசர் சதாசிவத்திடம் ஆலோசனைக் குச் சென்றார்?'' என்று கேட்டார். அதற்கு ராமதாசர், ''முன்பு இருமுறை அவரது ஆலோசனையின்படி நடந்த தால் எனக்கு மூவாயிரம் ரூபாய் லாபம் கிடைத் தது. அதனால் இந்த முறையும் அவரிடம் சென்றேன்,'' என்றார்.

''அப்படியானால் நீங்கள் சதா சிவத்திற்கு இரண்டாயிரம் ரூபாய் ஆலோசனைக் கட்டணமாகத் தர வேண்டும். ஏனெனில் அவரது யோசனையினால் தானே உங்களுக்கு மூவா யிரம் லாபம் கிடைத்தது,'' என்றார்.

இதைக் கேட்டு கிராம மக்கள் சிரித் தனர். கிராம அதிகாரி உறுதியான குர லில், ''இனி சதாசிவத்திடம் ஆலோ சனை கேட்பவர்கள் அவர்களுக்குக் கிடைக்கும் லாபத்தில் பாதியை அவருக்குக் கொடுக்க வேண்டும். நஷ்டம் ஏற்பட்டால் அவர் அவரது பாதிப் பங்கை உங்களுக்குத் தருவார். இந்த நடவடிக்கை என் முன் தான் நடைபெற வேண்டும். இப்படிச் செய்யாவிட்டால் நான் இதற்குப் பொறுப்பாளியாக மாட்டேன்,'' என்றார்.

இதனால் முன்பு இலவசமாகக் கிடைத்த ஆலோசனைக்கு மக்கள் கட் டணம் செலுத்த வேண்டியதாயிற்று. கிராம மக்கள் ராமதாசரைச் சபித்தனர்.





# மர்மக் குளம்

## 5

(காட்டு யானைகளைத் துரத்திய பிறகு முதலை மனிதன் மணியைத் தேடி அலைந்தான். மலைப்பாம்பின் வாயில் அகப்பட்ட மணி உயிருக்காகப் போராடிக் கொண்டிருந்தான். ஜெயசீலன் அவனைக் காப்பாற்றி அவனிடம் விபரங்கள் கேட்டுக் கொண்டிருந்தான். அப்பொழுது முதலை மனிதன் அங்கு வந்தான். அவனைப் பார்த்ததுமே ஜெயசீலன் வாளை உருவினான். சித்தசாதகனும் மந்திர தண்டத்தில் கை வைத்தான்) - அதன் பிறகு

பயமின்றி வாளுடனும் மந்திர தண்டத்துடனும் தன்னை எதிர்ப்பதற்காக நின்ற ஜெயசீலனையும், சித்த சாதகனையும் கண்டு முதலை மனிதன் பயந்தான். தனது வாகனத்தையும், முதலை உருவத்தையும் கண்டு அவர்கள் பயந்து நடுங்கி 'செத்தோம், பிழைத்தோம்' என்று ஓடிவிடுவார்கள் என்று நினைத்தான். ஆனால் அப்படி ஏதும் நடக்கவில்லை.

சூலத்தைக் கையிலெடுத்தபடி முதலை மனிதன் சத்தமாக ''நீங்கள் யார்? இந்தக் காட்டில் உங்களுக்கு என்ன வேலை?'' என்று கேட்டான்.

வாளைக் கையில் எடுத்துக் கொண்டு ஜெயசீலன், ''உன்னுடைய உருவத்தைப் பார்த்தால் எனக்குச் சிரிப்புத் தான் வருகிறது. நான் கேட்க வேண்டிய கேள்வியை நீ கேட்கிறாய். அது சரி, நீ யார்? இந்தக் காட்டில் உனக்கென்ன வேலை? உன்னைப் போல் உன் யானையையும்



விசித்திரமான தோலினால் மூடியிருக்கிறாய்? இந்தப் போலி எல்லாம் எதற்கு?'' என்று கேட்டான்.

''சீ! ஒரு மனிதன் என்னைக் கேள்வி கேட்பதா? என்ன அவமானம்!'' என்றபடி முதலை மனிதன் தனது ஆயுதத்தைக் கையில் எடுத்தான். அப்பொழுது அவன் வாலைப் பிடித்துக் கொண்டு நடுங்கிக் கொண்டிருந்த முத்து தைரியத்தை வரவழைத்துக் கொண்டு முதலை மனிதனின் சூலந்தாங்கிய இரண்டு கரங்களையும் வலுவாகப் பிடித்துக் கொண்டு, ''முதலை ஐயா! அமைதியாக இருங்கள். நீங்கள் பெரிய வீரர் தான். அதில் சந்தேகமே இல்லை. ஆனால் இப்பொழுது ஒடிந்த பாதி வாள் உங்கள் வயிற்றில் பாய்ந்து தொங்கிக் கொண்டிருக்கிறது. இவர்களுடன் சமாதானமாகப் போவது தான் நல்லது. ஏனென்றால் உங்களுக்கு வைத்தியம் செய்யும் மணியும் வைத்தியம் செய்யும் நிலையில் இல்லை,'' என்றான்.

வீரன் சொன்னதைக் கேட்டு முதலை மனிதன் மணியைப் பார்த்தான். எழுந்திருக்க முயற்சி செய்தும் அவனால் எழுந்திருக்க முடியவில்லை. கால்கள் நடுங்கிக் கொண்டிருந்தன. வேதனையில் முனகிக் கொண்டிருந்தான். அவன் பக்கத்தில் வெட்டப்பட்ட பாம்பு துடித்துக் கொண்டிருந்தது. இந்தக் காட்சியைப் பார்த்து முதலை மனிதன் சிறிது நேரம் சும்மாயிருந்தான். பிறகு ''மணி! எனக்கு சிகிச்சை செய்ய வந்து மலைப் பாம்பிடம் மாட்டிக் கொண்டாய். ஒருவேளை அதை நீ வைத்தியத்திற்கான மூலிகைக் கொடி என்று நினைத்தாயா? நீ விரும்பினால் யானையையே விழுங்கும் சக்தி படைத்த பாம்பினை உனக்குத் தந்திருப்பேனே!'' என்றான்.

பிறகு அவன் ஜெயசீலனையும், சித்தசாதகனையும் பார்த்து ''இன்னும் நீங்கள் இங்கு தான் இருக்கிறீர்களா? உயிரின் மேல் ஆசை இருந்தால் ஓடிவிடுங்கள். இல்லாவிட்டால் எனது சூலத்திற்குப் பலியாகிவிடுவீர்கள்,'' என்றான்.

ஜெயசீலன் வாளை ஓங்கியபடி முன்னேறினான். அப்பொழுது யானையின் மீதிருந்த முத்து ''வாள் ஏந்திய வீரனே! சற்றுப் பொறு! இந்த முதலை மனிதனின் மீது வாளை ஏன்

வீசுகிறாய்? அது போரிடும் நிலையில் இல்லாதவனைக் கொல்வதற்குச் சமம். ஏற்கனவே இவன் வயிற்றில் வாள் பாய்ந்திருக்கிறது. அதை வெளியில் எடுக்காவிட்டால் ரத்தம் உறைந்து சாக நேரிடும்,'' என்றான்.

''இவன் சாவு சுலபமாக இருப்பதை நானும் விரும்பவில்லை. இவன் வயிற்றில் பாய்ந்துள்ள வாளின் மறுபாதி கனகாட்ச மன்னரிடம் இருக்கிறது,'' என்று ஜெயசீலன் கூறினான்.

ஜெயசீலன் கூறி முடிப்பதற்குள் சீற்றத்துடன் ''உனக்கு என்னைப் பற்றி எல்லாமே தெரிந்திருக்கிறது போலும்!'' என்று முதலை மனிதன் கூறினான்.



''ஆம்! தெரியும்! காட்டில் இளவரசன், இளவரசியை அபகரித்தாய். உன் வயிற்றில் பாய்ந்துள்ள பாதி வாள் இளவரசன் காஞ்சனவர்மனுடையது,'' என்றான் ஜெயசீலன். இதற்குப் பிறகும் உன்னை உயிருடன் விடக்கூடாது!'' என்று கூறியபடி முதலை மனிதன் அவர்கள் மீது சூலத்தை எறியத் தயாரானான். அப்பொழுது முத்து சூலத்தைப் பிடித்துக் கொண்டான். தடுமாறி அவன் கீழே விழுந்தான். சூலமும் விழுந்தது.

அதே சமயம் ஜெயசீலன் யானையின் பின்புறமாக ஏறி முதலை மனிதனின் கழுத்தைப் பிடித்துக் கொண்டான். சித்தசாதனும் கீழே விழுந்த சூலத்தை எடுத்துக் கொண்டு ''ஜெய் மகாகாளி!'' என்று உரக்கக் கூறினான். முதலை மனிதன் சூலமும் போய் எதிரிகளின் வலையிலும் விழுந்து விட்டான்.

ஜெயசீலன் அவன் கழுத்தில் வாளை வைத்தபடி, ''இப்பொழுது சொல். நீ யார்? உன்னுடைய பெயர் என்ன? உன்னுடைய தோல்வியை ஒப்புக் கொள். இல்லாவிட்டால் கொன்றுவிடுவேன்,'' என்றான்.

''ஏ மனிதனே! உனது தைரியத்தை பாராட்டுகிறேன்,'' என்றான். அவன் கழுத்தை குலுக்கியபடி, ''ஏய்! போலி முதலையே! உன்னுடைய பெயரைச் சொல். தோல்வியை ஒப்புக் கொண்டு என்னுடன் வந்து ஹிரண்யபுரி மன்னர் கனகாட்சனிடம் அவரது குழந்தைகளை எங்கு ஒளித்து வைத்திருக்கிறாய் என்று சொல்!'' என்றான் ஜெயசீலன்.



"எனது பெயர் மகரகேது. மன்னரின் குழந்தைகளை எங்கு வைத்திருக்கிறேன் என்று சொல்ல அவ்வளவு தூரம் போக வேண்டாமே, உன்னிடமே கூறுகிறேனே!" என் றான் மகரகேது.

இதை ஒப்புக் கொள்ளாத ஜெயசீலன், "என்னிடம் சொல்ல வேண்டியது இல்லை. வினோத யானையுடன் ஹிரண்யபுரிக்கு வா! வழியில் தப்ப நினைத்தால் ஒரே வீச்சில் உன் கழுத்தைச் சீவி விடுவேன்," என்று ஜெயசீலன் கூறினான்.

மகரகேது அவன் பேச்சை ஒப்புக் கொண்டு மேலே சென்றான். சித்த சாதகனும் யானை மீது ஏறிக் கொண்டான்.

அப்பொழுது கைதட்டி அவர்களை நிறுத்தி "என்னுடைய கிராமம் வழியில் தான் இருக்கிறது. இந்த அடர்ந்த வனத்தைக் கடப்பது கடினம். கொடிய மிருகங்கள் என்னைக் கொன்றுவிடும். அதனால் என்னையும் கூட்டிச் செல்லுங்கள்," என்று மணி கூறினான்.

"இந்தக் கொடியவனின் சிகிச்சைக்காக நீ வந்ததால் எனக்கும் இவனைப் பிடிக்க ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. எனவே உன்னைக் காப்பது என் கடமை. நீயும் முத்துவும் எங்களுடன் நடந்து வாருங்கள்," என்றான் ஜெயசீலன்.

எல்லோரும் ஹிரண்யபுரியை நோக்கி முன்னேறினர். அப்பொழுது "நான் காலையில் இருந்து இந்த மகரகேதுவிற்குச் சிகிச்சை செய்ய முயற்சி செய்து கொண்டு இருந்தேன். மற்ற எவரும் பாய்ந்த வாளுடன் இவ்வளவு நேரம் உயிருடன் இருந்திருக்க முடியாது. இவனோ அதை ஓர் ஆபரணம் போல் அணிந்து கொண்டு நடக்கிறான். இவன் நாடியைப் பரிசோதித்தேன். இவன் உடலில் ஓடும் ரத்தம் குளிர்ந்த ரத்தம். எனவே இவன் ஜலத்தில் வாழ்பவனாக இருக்க வேண்டும்," என்று மணி கூறினான்.

"நீ சொல்வதைப் பார்த்தால் தவளை போல் இவனும் நீரிலும் நிலத்திலும் வாழும் உயிரினம் என்று நினைக்கிறேன். கனகாட்ச மன்னரின் வேலை முடிந்ததும் மருத்துவ சம்பந்தமான ஆராய்ச்சி செய். இந்த யானையையும் உனக்குத் தருகிறேன்," என்று ஜெயசீலன் கூறினான்.

இதைக் கேட்டு பல்லைக் கடித்த படி மகரகேது உறுமிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். திடீரென்று மகர கேது மீது ஓர் அம்பு விழுந்தது. ஜெயசீலன், சித்தசாதகன் இருவரும் திகைத்தனர். ஜெயசீலன் புதர்களின் வழியாக பார்த்தான். அப்பொழுது ''எந்த மகரகேதுவை நான் கொல்ல வேண்டும் என்று நினைத்திருந் தேனோ, அவனை நீ எங்கு கூட்டிச் செல் கிறாய்? அப்படி நீ செய்தால் என் அம்பு உன் மார்பில் பாயும்,'' என்ற அட்டகாசமான குரல் ஒலித்தது.

அது பலராமனின் குரல் என் பதை ஜெயசீலனும் சித்தசாதகனும் உணர்ந்து கொண்டனர். ''ஏ பலராமா! இன்னும் ஓர் அம்பு விழுந்தால் உன் னைக் காளிக்குப் பலியாக்கிவிடு வேன்,'' என்று சித்தசாதகன் கூறி னான். ''நீ யார்? மன்னருடைய பூத வைத்தியனா?'' பலராமன் கத்தினான்.

''நான் பூத வைத்தியன் அல்ல. சித்தசாதகன். மந்திரக்கலை பயின் றவன். பேசாமல் மரத்தை விட்டு இறங்கு. இல்லாவிட்டால் என் மந்திரத்தால் மரம் தீ பிடித்து நீ கருகிச் சாவாய்!'' என்றான் சித்தசாதகன்.

''என்னை அழிக்க யாராலும் முடியாது. நான் தான் மகரகேதுவுடன் உங்களையும் அழிப்பதற்காக இங்கு வந்திருக்கிறேன்,'' என்றான் பல ராமன். ''யாரை மிரட்டுகிறாய்? உன் னைப் போன்ற பலரை நான் பார்த் திருக்கிறேன். தைரியம் இருந்தால் நேருக்கு நேர் சண்டை போட வா! ஏன் ஒளிந்து நின்று மிரட்டுகிறாய்?'' என்று ஜெயசீலன் கூறினான்.

''என்ன! அந்த நீச பலராமனா என் மீது அம்பு எய்கிறான். நான் மர்மக் குளத்தின் அதிபதி. எனக்கா இந்தக் கதி? எனது யானை மரத்தின் மீது மோதி அவனைக் கீழே தள்ளி மிதித்துக் கொன்றுவிடும்,'' என்று மகரகேது கத்தினான்.

இதைக் கேட்டதுமே யானை மரத் தின் மீது மோதி தும்பிக்கையினால் மரத்தை இழுத்துக் கீழே தள்ளியது. கிளைக்கு நடுவில் அகப்பட்டுக் கொண்ட பலராமன் உரக்கக் கத்தலானான். (தொடரும்)





# உழைப்பே உயர்வு

ஒரு கிராமத்தில் மாதவன் என்ற இருபது வயது ஏழை இளைஞன் இருந்தான். நாளெல்லாம் வயலில் உழைத்தும் வயிறு நிறைய உணவு கிடைக்கவில்லை.

ஒருநாள் குளக்கரையில் ஒரு சன்னியாசியைக் கண்டான். அவர் மாதவனின் வருத்தத்திற்குக் காரணம் கேட்டார். அதற்கு ''சுவாமி! எவ்வளவோ உழைத்தும் அதற்கேற்ற பலன் எனக்குக் கிடைக்கவில்லையே! ஏன்?'' என்று கேட்டான்.

''உழைப்பிற்கு ஏற்ற பலன் நிச்சயம் கிடைக்கும். இதற்காகவா வருந்துகிறாய்?'' என்று சன்னியாசி கூறினார்.

''மன்னியுங்கள் சுவாமி! உங்கள் கருத்து தவறானது. எல்லோருக்கும் உழைப்புக்குத் தகுந்த பலனைக் கடவுள் கொடுப்பதில்லை,'' என்றான் மாதவன்.

''அப்படியா! எனக்கு அதுபற்றித் தெரியவில்லை. ஏதாவது உதாரணம் கொடுக்க முடியுமா?''

''ஏன் இல்லை? இந்தக் கிராமத்தில் சாஸ்திரங்களில் கரைகண்ட கோபால் என்ற மகாவித்வான் எளிமையாகவே வாழ்கிறார். ஆனால் அவரிடம் பயின்ற மாணவனோ ராஜாவிடம் வேலை பார்த்து சுகபோக வாழ்க்கை நடத்துகிறான். இதற்கு என்ன சொல்கிறீர்கள்?'' என்று மாதவன் கேட்டபோது, ''கோபால் ராஜாவிடம் சென்று வேலை கேட்டாரா?'' என்று சன்னியாசி கேட்டார்.

''இல்லை! அவர் ஊரைவிட்டுப் போகவே விரும்பாததால் ராஜாவிடம் போகவில்லை,'' என்றான் மாதவன். ''பார்த்தாயா! முயற்சி செய்திருந்தால் அவருக்கும் கிடைத்திருக்கும்!'' என்றார் சன்னியாசி.

''சுவாமி! உங்கள் கூற்றை நான்

- சித்தநாதன் -

ஏற்கமாட்டேன். என் போன்றவர்கள் எவ்வளவு முயற்சி செய்து உழைத்தாலும் எங்கள் பாக்கியத்தில் எழுதிய படி தான் பலன் கிடைக்கிறது. எனக்கு மட்டும் சுகமாக வாழ ஆசை இருக்காதா?'' என்றான் மாதவன்.

அவன் மேல் இரக்கம் கொண்டு சன்னியாசி அவனிடம் ஒரு கல்லைக் கொடுத்து, ''இது மிகவும் விலை உயர்ந்த வைரம். இதை விற்றால் லட்சம் பொன் கிடைக்கும். அதை வைத்துக் கொண்டு நீ சுக்மாக வாழ்வாயாக!'' என்று கூறிவிட்டு அங்கிருந்து சென்றார்.

ஒரு வருடம் கழித்து மாதவனைக் காண வந்தபோது அவன் மிகவும் செல்வந்தனாக இருந்தான். மாளிகையில் சுகமாக வாழ்ந்தான். வேலை செய்ய நிறைய ஆட்கள் இருந்தனர்.

சன்னியாசியைக் கண்டதும் ஓடி வந்து வணங்கி, ''சுவாமி! உங்களால் தான் எனக்கு இத்தகைய வாழ்க்கை கிடைத்தது. நான் இப்பொழுது மிகவும் சுகமாக இருக்கிறேன்,'' என்றான் மாதவன்.

''ஆம்! பார்க்கிறேன். அது சரி! உன்னுடைய செல்வத்தில் சிறிதாவது மற்றவர்களுக்குத் தருகிறாயா?'' என்று சன்னியாசி கேட்டபோது, ''நான் ஏன் கொடுக்க வேண்டும்? நீங்கள் கொடுத்த கல்லினால் எனக்குச் செல்வம் கிடைத்தது. அந்த பாக்கியத்தை நான் அனுபவிக்கிறேன். மற்றவர்களைப் பற்றி நான் ஏன் நினைக்க வேண்டும்?'' என்று மாதவன் கூறினான்.

''அப்பா! பாக்கியம் நிலையாதது. உழைப்பு ஒன்றே நிலையானது. செல்வம் வந்தபோது மற்றவர்களுக்கும் கொடுக்கும் எண்ணம் இல்லாத



தால் அது உன்னிடம் நிலைக்காது,'' என்றார் சன்னியாசி.

அதே சமயத்தில் வைரக் கல்லை வாங்கிய வியாபாரி, ''இந்தக் கல் வைரம் அல்ல. போலி என்று கூறு கிறார்கள். எனது லட்சம் பொன்னைத் திருப்பித் தா!'' என்றான்.

சொத்தை எல்லாம் விற்று வியா பாரிக்குக் கொடுத்துவிட்டு மறுபடி யும் மாதவன் ஏழையானான். அப் பொழுதும் அவனுக்கு ஆசை போகவில்லை.

''சுவாமி! எனக்கு மிகவும் உயர்ந்த கல்லைக் கொடுங்கள். மறுபடியும் செல்வந்தனாக விரும்புகிறேன்,'' என்றான் மாதவன்.

''உனக்கு இன்னுமா புத்தி வர வில்லை. பாக்கியம் வரும், போகும். உழைப்பும் முயற்சியும் தான் நிலையானது. கிராமத்தில் வீணாகக் கிடக்கும் பூமியைப் பண்படுத்தி விவசாயம் செய். பூமி உனக்கு ஒருபோதும் துரோகம் செய்யாது. அதிக உழைப்பினால் அதிக விளைச் சல் வரும். நீயும் சுகமாக இருப்பாய்!'' என்று கூறிவிட்டு சன்னியாசி அங்கிருந்து சென்றார்.

அன்றிலிருந்து மாதவன் கடுமை யாக உழைத்தான். மலையிலிருந்து வரும் தண்ணீரை வறண்ட நிலங் களில் பாய்ச்சி வரப்புக்கள் அமைத் தான். நிலத்தைப் பல பாகங்களாகப் பிரித்து தானியங்களும், காய்கறி வகைகளும் பயிரிட்டான். இரவு பகலாகப் பாடுபட்டதன் பலனாக வறண்ட பூமி பச்சைப் பசேலென்று மாறியது. தானியக் குவியலை நகரில் உள்ள வியாபாரிகளுக்கும், காய்கறி களைச் சந்தைக்கும் எடுத்துச் சென்று விற்று பணம் குவித்தான்.

ஓரிரண்டு வருடங்களில் நிறையப் பணம் கிடைத்ததால் வண்டி மாடு வாங்கினான். கிடைத்த செல்வத்தில் தான தர்மம் செய்தான். ஊரார் பாராட்ட மிகச் சிறப்பாக வாழ்ந்தான். சன்னியாசியின் புத்திமதியினால் உழைப்பே உயர்வு என்பதைப் புரிந்து கொண்டு சுகமாக வாழ்ந்தான்.



நவீன
வேதாளக்
கதை

# ராஜபக்தி

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலை கீழே வீழ்த்தினான்.

பின்னர் கீழே இறங்கி அதை சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! உன் னுடைய துடிப்பும் வீரமும் புகழத்தக்கது. எனவே உன்னைப் பாராட்டாமல் இருக்க முடி யாது. உன்னிடம் நல்ல குணங் கள் நிறைந்திருந்தாலும் சில குறைகளும் இருக்கின்றன. இந்.



தக் குறைகளை நீக்காவிட்டால் உனக்குப் பெரும் ஆபத்து ஏற்படும்.

எந்த ஒரு விஷயத்தையும் ஆழ மாக ஆராய வேண்டும். இல்லை யெனில் உண்மையை உணர முடி யாது. உன்னைத் திருத்திக் கொள்ள வீரதத்தனின் கதையை உனக்குச் சொல்லப் போகிறேன். கவனமாகக் கேள்,'' என்றபடி வேதாளம் மேலே தொடர்ந்தது.

வெகுகாலத்திற்கு முன் தகடூர் என்னும் ஊரில் வீரதத்தன் என்ற இளைஞன் இருந்தான். அவன் சிறந்த போர் வீரன். எல்லாவிதப் போர்க் கலைகளிலும் நிபுணன். மல்யுத்தம், வில் வித்தை, கதை யுத்தம் போன்ற சகல யுத்தக் கலைகளிலும் வல்ல வன். இதைத் தவிர சாஸ்திர வித்தை யிலும் சிறந்தவன்.

தகடூர் ராஜ்ஜியத்தின் சேனாதிபதி திடீரென இறந்துவிட்டார். அந்தப் பதவிக்குத் தகுதியானவரை தேர்ந் தெடுக்க நகரில் ஒரு பெரிய போட் டிக்கு ஏற்பாடு செய் யப்பட்டிருந்தது. வீரதத்தன் அந்தப் போட்டியில் பங்கு பெறத் தீர்மானித்தான். அவனது எண் ணத்தை அறிந்த அவனது தந்தை ''மகனே! அரசனிடம் வேலை பார்ப் பது கத்தி முனையில் நடப்பது போலாகும். பாம்பின் நிழலில் நீ வாழ விரும்புகிறாயா? இங்கிருந்து விவசாயத்தைக் கவனி. நிம்மதியாக வாழ்ந்து கவலையில்லாமல் இரு!'' என்றார்.

தந்தையின் அறிவுரை வீரதத்தனுக் குப் பிடிக்கவில்லை. தன்னுடைய மறுப்பைத் தெரிவித்தபடி போட்டி யில் கலந்து கொள்ளத் தலைநகருக் குப் புறப்பட்டான்.

அந்தப் போட்டியில் பங்கு பெற அநேக வீரர்கள் வந்திருந்தனர். போட்டியின் முதற்கட்டத்தில் அவன் சுலபமாக ஜெயித்துவிட்டான். இது போல போட்டியின் பல கட்டங்கள் இருந்தன. எல்லாவற்றிலும் எதிரி களை வென்று முதலாவதாக வந்தான்.

போட்டியில் முதலாவதாக வந்த தால் சேனாதிபதி பதவிக்குத் தகுதி உடையவனாக ஆகிவிடுவோம் என்று வீரதத்தன் எண்ணினான். ஒரு மாளிகையில் அவனை தங்க வைத்த போது அவனது நம்பிக்கை மேலும் உறுதியாயிற்று.

மறுநாள் தகடூர் நாட்டின் முதன் மந்திரி கிரிநாதர் வீரதத்தனைப் பார்க்க

அவன் மாளிகைக்கே வந்தார். வீர தத்தனின் வீரத்தையும் ஞானத்தையும் மந்திரி வெகுவாகப் புகழ்ந்தார். பின்பு "இந்தப் போட்டிகளில் தேர்வு பெற்றதால் மட்டுமே இந்தப் பதவியை நிர்வகிக்கும் தகுதியிருக்கிறது என்று கூறிவிட முடியாது. எனவே சமயத்திற்கு ஏற்ப அவ்வப் பொழுது பல பரீட்சைகளை நீ சந்திக்க வேண்டியிருக்கும். இதற்காக சில நாட்கள் நீ காத்திருக்க வேண்டும். ஆறு மாதம் வரை நீ அரச சபையில் வேலை செய்ய வேண்டும். எந்த வேலை கொடுத்தாலும் உரிய சமயத்தில் செய்து முடிக்க வேண்டும். ஆனாலும் உன்னை அதிகாரி என்று சொல்ல மாட்டார்கள். அதன் பிறகு தான் நீ சேனாதிபதி ஆக முடியும் என்று நாம் நம்புகிறேன்," என்றார்.

இரண்டு மாதம் வரை வீரதத்தனுக்கு எந்தவிதப் பொறுப்பும் கொடுக்கப்படவில்லை. ஒருநாள் திடீரென்று கிரிநாதரிடம் இருந்து அழைப்பு வந்தது. அவன் மந்திரியைப் பார்க்கச் சென்றான்.

கிரிநாதர் அவனை நன்கு உபசரித்துவிட்டு "வீரதத்தா! ஒற்றர்களின் தலைமை அதிகாரியிடமிருந்து ஒரு முக்கியமான செய்தி வந்துள்ளது. நமது அரசர் மார்த்தாண்டர் தினமும் மகாராணியுடன் தோட்டத்திற்குச் செல்வது வழக்கம். அந்த நேரத்தில் அவர்களைத் தவிர வேறு யாரும் அங்கு இருக்கக் கூடாது. மெய் காப்பாளர்களுக்குக் கூட அனுமதி கிடையாது. இந்த ரகசியத்தைத் தெரிந்து



கொண்டிருக்கும் விரோதிகள் அவர்களைக் கொல்ல சதி செய்திருக்கிறார்கள். இன்றிலிருந்து ராஜ தம்பதியைக் காப்பது உன் பொறுப்பு. நீ இருப்பது அவர்களுக்குத் தெரியக் கூடாது. தெரிந்தால் கடுமையான தண்டனை கிடைக்கும். ஜாக்கிரதை!" என்றார்.

வீரதத்தன் மகிழ்ச்சியுடன் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டான். அன்றிலிருந்து தோட்டத்தில் ராஜ தம்பதிகளுக்குப் பின்னால் அவர்களுக்குத் தெரியாமல் கண்காணித்தான். நான்கு நாட்கள் கழிந்தன. ஐந்தாவது நாள் திடீரென்று ஐந்து முரடர்கள் ராஜ தம்பதிகள் மீது பாய்ந்தனர். அவர்கள் அரசர் மார்த்தாண்டரைத் தாக்குவதற்குள் வீரதத்தன் வாளுடன் அவர்கள் மீது பாய்ந்தான். முரடர்கள் பயந்து ஓடிவிட்டனர்.



வீரதத்தன் ராஜ தம்பதிகளை வணங்கி கடந்த நான்கு நாட்களாக அவர்களை எப்படிக் காத்து வந்தான் என்பதை விளக்கினான். இதைக் கேட்டதுமே அரசர் அவனைச் சிறை யில் அடைக்கும்படி உத்தரவிட்டார். அன்றிரவு முதன்மந்திரி அவனைப் பார்க்க வந்தார். விபரங்களைத் தெரிந்து கொண்டார். வீரதத்தனுக்கு ஆறுதல் கூறியபடி ''வீரதத்தா! நாளைக்கு உன்னை ராஜசபையில் நிறுத்தி விசாரணை செய்வார்கள். அரசர் நிச்சயம் கடும் தண்டனை தருவார். ராஜ தர்பார் இது போன்ற ஆபத்துக்கள் நிறைந்ததாகும். எப் படியோ உனக்கு ஆபத்து வந்துவிட் டது. அதற்கு நானும் ஒரு காரணம், எனவே நீ இங்கிருந்து ஓடிவிடு. இது தான் என் அறிவுரை. அதற்கு வேண் டிய ஏற்பாடுகளை நான் செய்துவிட் டேன். அரசரை எப்படியாவது சமா ளித்துவிடுகிறேன்,'' என்றார்.

சிறிது நேரம் யோசித்துவிட்டு ''முதன்மந்திரியாகிய நீங்கள் கொடுத்த கட்டளையை நான் நிறை வேற்றினேன். அரசர் இதற்காக என்ன தண்டனை கொடுத்தாலும் அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. நான் எந்தத் தவறும் செய்ய வில்லை. எனவே இங்கிருந்து போக மாட் டேன். உங்களது தயாள குணத்திற்கு நன்றி!'' என்று வீரதத்தன் சொன் னான். மனதுள் சிரித்தபடி கிரிநாதர் வீரதத்தனின் தோளைத் தட்டினார். பின்பு அங்கிருந்து சென்றுவிட்டார்.

இக்கதையைச் சொல்லிவிட்டு விக்கிர மாதித்தனிடம், ''மன்னனே! வீரதத்தன் பெரிய வீரனாக இருக்க

லாம். ஆனால் மூர்க்கன் என்று நான் நினைக்கிறேன். தந்தை சொல்லைக் கேட்காமல் ராஜ சபையில் வேலை தேடி வந்ததே முட்டாள்தனம். முதன் மந்திரியின் சொல்லைக் கேட்காமல் சிறையில் இருந்தான். யாரைக் காப் பாற்றினானோ அந்த நன்றி கெட்ட அரசரே இவனைச் சிறையில் தள்ளி னார். அத்தகைய அரசரை அவன் எப்படி நம்பினான்? தர்பாரில் விசா ரணைக்கு ஏன் ஒப்புக் கொண்டான்? இதற்கு விடை தெரிந்தும் சொல்லா விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்,'' என்று வேதாளம் சொன்னது.

அதற்கு விக்கிரமாதித்தனும், ''வீர தத்தன் மாவீரன் என்பதில் சந்தேகமே இல்லை. அத்தகைய நபரே அர சரிடம் வேலை செய்யத் தகுதியான வர். எனவே தான் சேனாதிபதி பத விக்கான போட்டியில் அவன் கலந்து கொண்டான். வீரமும் யுத்த தந்திரமும் மட்டுமே அப்பதவிக்குரிய அளவுக் கோல் இல்லை. ராஜ தம்பதிகளைக் காப்பாற்ற ஐந்து முரடர்களுடன் மோத வேண்டியிருந்தது. ராஜ தம்பதி களின் தனிமைக்குப் பங்கம் ஏற்பட் டது என்பது ஒரு போலியான குற்றச் சாட்டு. வீரதத்தனை சிறையில் அடைத்து மறுதினம் விசாரணைக்கு உத்தரவிட்டது எல்லாம் ராஜா-மந்திரி யின் தனிப்பட்ட நீதியாகும். வீரதத்த னின் ராஜபக்தி, தேசபக்தி, கடமை யுணர்வு ஆகியவற்றைத் தெரிந்து கொள்வதற்காகவே இந்த வழிகளை அவர்கள் அனுசரித்தனர். சிறையி லிருந்து தப்புவதற்கான ஏற்பாடு களைச் செய்து இருக்கிறேன் என்று மந்திரி சொன்னபோது வீரதத்தன் அதை மறுத்துவிட்டான். இது அவ னது ராஜபக்தியை உறுதி செய்கிறது. இதனால் தான் மந்திரி மனதிற்குள் சிரித்தபடி அவன் தோளைத் தட்டி னார். எல்லாத் தேர்வுகளிலும் வெற்றி பெற்றிருப்பதால் சேனாதிபதி பத விக்கு வீரதத்தன் முற்றிலும் ஏற்றவன் தான் என்பது தெளிவாகிறது.''

விக்கிரமாதித்தனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் வேதாளம் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# ததீசியின் தியாகம்



ஆயிரக்கணக்கான வருடங்களாக தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அதில் அசுரர்களே தேவர்களைக் காட்டிலும் பலமுறை அதிகமாக வெற்றி பெற்றிருந்தனர். அசுரர்களில் பலர் பலசாலிகளாகவும் திறமை மிக்கவர்களாகவும் இருந்தனர். விஞ்ஞானத்தின் பல விஷயங்களில் அவர்கள் நிபுணர்களாக இருந்தனர். ஆனால் அவர்கள் மிகவும் பெருமையும் கர்வமும் கொண்டவர்களாக இருந்தனர். சொந்த சுகத்திற்காக பல கொடுமைகள் செய்து வந்தனர். தெய்வ பக்தி, அடக்கம், சமாதானம் போன்ற உயர்ந்த பண்புகளைத் துச்சமாக மதித்து வந்தனர். ஒரு சிலரைத் தவிர மற்றவர்கள் அனைவருமே அமைதியை விரும்புபவர்களையும் தியானத்தில் ஆழ்ந்து இருப்பவர்களையும் அறவே வெறுத்தனர். எனவே முனிவர்கள் தான் பெரும்பாலும் அவர்களால் துன்புறுத்தப் பட்டு வந்தனர். சொர்க்கத்தில் வசிப்பவர்களாக இருப்பதால் தேவர்கள் அவர்களது முதல் எதிரிகள். பூமி மட்டுமின்றி சொர்க்கத்தையும் தமதாக்கிக் கொள்ள நினைத்தனர். பலமுறை தேவர்களின் தலைவனான இந்திரனை அவன் மாளிகையில் இருந்து ஓடச் செய்திருந்தனர். முப்பெரும் கடவுள்களான பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோரின் உதவியுடன் இந்திரன் மறுபடியும் தனது

- பாரதியன் -

இடத்தையும் அதிகாரத்தையும் திரும்பப் பெற்றான்.

ஒருமுறை விருத்திராசுரன் என்ற அசுரன் பலமிக்கவனாகவும் பேராசை மிக்கவனாகவும் இருந்தான். ஏதாவது ஒரு காரணத்திற்காகவோ அல்லது காரணம் இல்லாமலோ தனது படையுடன் பலமுறை தேவர்களுடன் மோதி வெற்றியும் கண்டான். எவ்வளவோ முயற்சித்தும் இந்திரனால் அவனை வெல்ல முடியவில்லை.

அந்த அசுரன் பெற்றிருந்த வரத்தால் தீயினாலோ தண்ணீரினாலோ அல்லது எந்தவொரு ஆயுதத்தினாலோ அவனுக்கு அழிவு ஏற்பட முடியாது.



விருத்திராசுரனின் கொடுமைகளிலிருந்து மீள்வதற்கான வழிமுறைகளை இந்திரன் பல முனிவர்களிடம் கேட்டு வந்தான். எந்த ஒரு முனிவர் தனது தவ வலிமையால் இந்திரனை வெல்லும் சக்தி பெற்றிருக்கிறாரோ அவரால் மட்டுமே விருத்திராசுரன் அழிக்கப்படுவான் என்பதை இந்திரன் அறிந்து கொண்டான். அத்தகைய வலிமை பெற்றவர் ததீசி என்ற முனிவர் மட்டுமே என்பதையும் அவன் தெரிந்து கொண்டான். தனது பதவியை அவர் பறிக்கட்டும் என்று எண்ணி பலமுறை அவரது தவத்தைக் கெடுக்க இந்திரன் முயற்சி செய்திருந்ததால், இப்பொழுது அவரை உதவிக்காக அணுகுவதற்குத் தயங்கினான்.

தேவர்கள் முனிவரை அணுகாததற்கு இந்திரனின் தயக்கம் மட்டும் காரணம் அல்ல. விருத்திராசுரனைக் கொல்லும் வழி கேள்விப்பட்டிராத ஒன்றாக இருந்தது. விருத்திராசுரனைக் கொல்ல இந்திரனின் ஆயுதமான இடி மிகவும் வலிமை வாய்ந்ததாக இருக்க வேண்டும். அது அந்த அளவு வலிமை பெற வேண்டுமானால் அதில் முனிவர் ததீசியின் எலும்பைக் கொண்டதாக இருக்க வேண்டும். அதாவது இதற்காக ததீசி முனிவர் தன்னைத் தியாகம் செய்து, எலும்பை இடியின் உள் செலுத்த வேண்டும். இந்தக் கொடுமையான வழியை முனிவரிடம் எப்படிக் கூறுவது என்று தேவர்கள் தயங்கினர்.

இதைக் கேட்டால் முனிவர் ஏளனமாகச் சிரிப்பார் என்றும் தவம் செய்யும்போது பல தீங்குகள் இழைத்த இந்திரனுக்குத் தான் ஏன் உதவி

செய்ய வேண்டும் என நினைக்கலாம் என்றெண்ணி இந்திரன் கலங்கினான். என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தான்.

இதற்கிடையில் அசுரன் முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் மேன் மேலும் தீங்கு செய்து வந்தான். தனிமையில் இருந்தாலும் அசுரனது கொடுமைகளைப் பற்றி ததீசி முனிவர் கேள்வியுற்றார். அவனை அழிக்கும் வழியைப் பற்றியும் அவர் அறிந்து கொண்டார். அவர் ஒரு விநாடி கூடத் தயங்கவில்லை. ஒரு வேள்வியைத் தொடங்குமாறு தேவர்களிடம் சொன்னார். ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்து தன் உடலைத் தியாகம் செய்தார்.

அவது எலும்பைக் கொண்டு இடிக்கு மேலும் வலுவூட்டினார்கள். மறுமுறை சண்டை வந்தபோது இந்திரனது ஆயுதமான இடி விருத்திராசுரனை சுலபமாக அழித்தது.

இவ்வாறு ஓர் உயர்ந்த கொள்கைக்காக ததீசி முனிவர் மிகப்பெரிய தியாகத்தைச் செய்தார். கடந்த காலத்தில் இந்திரன் பலமுறை அவருக்குக் கெடுதல் செய்திருந்த போதிலும் அவனிடத்தில் பகைமையை வெளிப்படுத்தவில்லை. அசுரர்களையும் அவர் வெறுக்கவில்லை. மனிதர்களும் தேவர்களும் அமைதியுடனும் பத்திரமாகவும் இருக்க வேண்டுமானால் அசுரன் ஒழிக்கப்பட வேண்டும் என்பதை அவர் உணர்ந்தார்.

தவத்தினால் அவர் தன் உடலைப் புனிதப்படுத்திக் கொண்டார். அவரிடம் ஒரு துளியும் சுயநல சிந்தை இல்லாததால் தான் அவர் எலும்புகள் அத்தகைய பலம் பெற்றிருந்தன. நல்ல செயலுக்கும் பெருந்தன்மைக்கும் அவர் சிறந்த உதாரணமாகத் திகழ்ந்தார்.





# ரகசியப் பரிசு

கார்த்திக் என்ற செல்வந்தனுக்குப் புகழ் பெற வேண்டும் என்ற ஆர்வம் இருந்தது. ஒரு பெரிய கலைஞனாகப் புகழ்பெற விரும்பினான். அப்பொழுது அவன் மனைவி, ''கலைக்குரிய திறமை பிறவியிலேயே உங்களிடம் இருக்க வில்லை. எனவே கலைஞனாவது கடினம். ஆனால் கலைஞர்களுக்கு மரியாதையும் பரிசும் தருவதன் மூலம் கலைஞர்களை விட நீங்கள் பெயர் பெற முடியும்,'' என்றாள்.

மனைவியின் கருத்து கார்த்திக்குக்கு சரியென்று தோன்றியது. முதலில் அவன் நடராஜன் என்ற நடனக் கலைஞனைச் சந்தித்தான். அவனிடம் தன்னுடைய கருத்தைத் தெரிவித்தான்.

அவனுடைய எண்ணத்தைப் பாராட்டியபடி, ''உனது கருத்து சரியென்றே நினைக்கிறேன். ஆனால் இந்த விஷயத்தில் நான் ஒன்று கூற விரும்புகிறேன். என்னைப் பாராட்டும்போது அந்தக் கூட்டத்தில் எனது கலைத் திறமையை அறிந்த பலர் இருப்பார்கள். என்னை எதற்காகப் பாராட்டுகிறாய் என்று நீ அவர்களுக்கு விளக்க வேண்டியிருக்குமே!'' என்று கேட்டான் நடராஜன்.

''ஐயா! தேசம் முழுவதும் உங்களது புகழ் பரவியிருக்கிறது. இந்த நிலையில் மற்றவர்களின் கருத்து எதற்கு? நான் தனியாகவே உங்களைப் பாராட்டுவேன்,'' என்று கார்த்திக் கூறினான்.

இதை மறுத்தபடி, ''உனக்கு நாட்டியத்தைப் பற்றிய அறிவு சிறிதும் கிடையாது. நீ என்னைப் பாராட்டு

- காயத்ரி -



வதற்குத் தகுதியானவனே அல்ல. எவர் என்னைப் பாராட்ட விரும்பு கிறாரோ அவர் நிச்சயமாக நாட்டியப் பேரொளியாகவும் குருவாகவும் இருக்க வேண்டும்,'' என்றான் நடராஜன்.

கார்த்திக் நாட்டியக் கலையின் குருவான சங்கரை சந்தித்து விபரங் களைக் கூறினான். அதற்கு ''யாருமே தனியாக ஒருவனின் திறமையை அளவிட முடியாது. அது நியாய மாகவும் இராது. நான் இன்னும் இரண்டு குருமார்களின் பெயரைக் கூறுகிறேன். நாங்கள் மூவரும் இந்த வருடத்தின் முதன்மையான நடனக் கலைஞன் யார் என்பதை ஏகமன தாகத் தீர்மானம் செய்கிறோம்,'' என்றார்.

''நாங்கள் நாட்டியக் குருமார்கள். நாங்கள் யாரைத் தேர்ந்தெடுக்கி றோமே அவனைத் தான் நீ பாராட்ட வேண்டும். உன்னுடைய கணிப்பை எங்களால் ஒப்புக் கொள்ள முடி யாது,'' என்று சங்கர் கூறினார்.

வருத்தத்துடன் இதை கார்த்திக் மனைவியிடம் சொன்னான். உடனே அவள், ''தேர்வு செய்பவர் யாரா யிருந்தாலும் அந்தக் கலைஞனைத் தேர்ந்தெடுத்துப் பாராட்டும் உரிமை உங்களுத்தான் உண்டு,'' என்றாள்.

மனைவியின் கருத்து சரியென்று தோன்றியது. பாராட்டிற்குரிய கலை ஞர்களைத் தேடி கார்த்திக் கஷ்டப் பட்டு நால்வரைத் தேர்ந் தெடுத்தான். அவர்களில் ஒருவன் கவிஞன், ஒரு வன் ஓவியன், ஒருவன் நடனக் கலைஞன், மற்றவன் பாடகன். இவர் கள் அனைவருமே தத்தம் கலைகளில் சாதாரண நிலையிலுள்ள கலைஞர் கள். ''அந்த நால்வரையும் கார்த்திக் தன் வீட்டிற்கு அழைத்து வந்தான்.

அப்பொழுது கார்த்திக்கின் மனைவி அந்த நான்கு கலைஞர் களையும் அழைத்து, ''என்னுடைய கணவர் மிகவும் சங்கோஜ குணம் உள்ளவர். இந்தப் பரிசாலும் பாராட் டாலும் அவரது புகழ் ஓங்குமே என்று பயப்படுகிறார். இந்தப் பாராட்டி னால் சமூகத்தில் அவருக்குப் பெயரோ மதிப்போ வருவதை அவர் விரும்பவில்லை. எனவே, உங்க ளைப் பாராட்டி ஒவ்வொருவருக்கும் நூறு பொற்காசுகள் தரப்படும். ஆனால் இந்தப் பாராட்டும் பரிசும் ரகசியமாகச் செய்யப்படுமானால் ஒவ்வொருவருக்கும் ஆயிரம் பொற் காசுகள் தரப்படும். இதில் எது

உங்களது விருப்பம் என்பதை நன்றாக யோசித்துக் கூறுங்கள்,'' என்றாள்.

அவர்கள் ஆயிரம் பொற்காசுகளைப் பெறவே விரும்பினர். எனவே கார்த்திக் ஒவ்வொருக்கும் தீர்மானித்த தொகையைக் கொடுத்து அனுப்பினான். அவர்களும் நன்றி தெரிவித்து விட்டுச் சென்றனர்.

இந்த நிகழ்ச்சி நடந்து சில நாட்களுக்குப் பிறகு நள்ளிரவில் யாரோ ஒருவன் கார்த்திக் வீட்டின் கதவைத் தட்டினான். கார்த்திக் கதவைத் திறந்தான். வந்தவன் நடராஜன்.

மெதுவான குரலில் நடராஜன், ''பலரும் என்னுடைய கலையை மிகவும் உயர்வாகப் பேசிப் பாராட்டியிருக்கிறார்கள். ஆனால் என்னுடைய கஷ்டகாலத்தில் எவருமே எனக்கு உதவ முன்வரவில்லை. இப்பொழுது எனக்கு பணக்கஷ்டம். தகுதியற்றவர்களிடமிருந்து பொருள் பெற்றால் எனக்குக் கெட்ட பெயர் வரும். நீ கலைஞர்களை மிகவும் ரகசியமாகப் பாராட்டிப் பரிசு தருகிறாய் என்பதை அறிந்தேன். நான் பரிசு பெற்றதை ரகசியமாகவே வைத்துக் கொள். உன்னுடைய பரிசை ஏற்றுக் கொள்ள நான் தயாராக இருக்கிறேன். நீ தரும் ஆயிரம் பொற்காசுகள் எனக்கு மிகப் பெரிய செல்வமாகும்,'' என்றான்.

''உன்னுடைய சொற்கள் என்னுடைய கடமை உணர்வை தட்டி எழுப்பியுள்ளது. என்னுடைய புகழுக்காக நான் பிறரைப் பாராட்டிப் பரிசு தரமாட்டேன். தேவையுள்ள கலைஞர்களுக்கு எப்பொழுதும் என்னால் ஆன உதவி செய்து கொண்டிருப்பேன்,'' என்று கார்த்திக் கூறியபடி நடராஜனுக்குத் தேவையான பணம் கொடுத்து அனுப்பினான்.





ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் மிகவும் வருத்தமாக இருந்தார். காரணத்தை மந்திரிகள் கேட்ட போது, ''எனது தாய் தன் கடைசி நேரத்தில் மாம்பழம் இல்லாத காலத்தில் மாம்பழம் கேட்டாள். அவள் ஆசையை என்னால் நிறைவேற்ற முடியவில்லை. இத்தனை பெரிய ராஜாவாக இருந்தும் தாயின் கடைசி ஆசையை என்னால் பூர்த்தி செய்ய முடியவில்லையே எனது வருந்துகிறேன்,'' என்று ராஜா சொன்னார்.

''பிரபு! இந்த விஷயத்திற்காக வீணாக ஏன் கவலைப்படுகிறீர்கள்? தங்கத்தினால் ஆன ஐந்து மாம்பழங்களைப் பண்டிதர்களுக்குத் தானமாகக் கொடுங்கள். அப்படிச் செய்வதால் இறந்த உங்கள் அன்னையின் ஆசை நிறைவேறி விடும். அவளது ஆத்மா சாந்தி அடையும்,'' என்று பண்டிதர்கள் யோசனை கூறினார்கள்.





கவலைப்பட்ட மன்னனின் மனதிற்கு பண்டிதர்கள் கூறிய யோசனை சரியென்று தோன்றியது. பண்டிதர்கள் இதற்காக ஒரு நல்ல நாளை நிர்ணயித்தார்கள். அன்று தங்கத்தினாலான ஐந்து மாம்பழங்கள் ஒவ்வொரு பண்டிதருக்கும் கொடுக்கப்பட்டன. பண்டிதர்களும் அவைகளைப் பெற்றுக் கொண்டு மன்னனை ஆசீர்வதித்தனர்.

அருகில் நின்ற தெனாலிராமன் பண்டிதர்களைப் பார்த்து, ''என் தாய்க்கும் ஓர் இறுதி ஆசை இருந்தது. ஆனால் அது நிறைவேறுவதற்குள் அவள் காலமாகிவிட்டாள். அடுத்த அமாவாசையன்று என் வீட்டிற்கு நீங்கள் வந்தால் உங்களுக்கு தானம் தருகிறேன். எனது கடமையும் பூர்த்தி அடையும்!'' என்று கூறினான்.





அமாவாசையன்று தெனாலிராமன், தர்ப்பணம் செய்துவிட்டு ஒவ்வொரு வராக பண்டிதர்களை வீட்டிற்குள் வரச் சொன்னான். திரும்பி வரும்போது ஒவ்வொருவரும் துணியினால் கையை மூடியபடி சென்றனர். அவர்கள் முகத்தில் கடுகடுப்பு இருந்தது.



பண்டிதர்கள் நேராக அரசனிடம் சென்றனர். தெனாலிராமனால் தங்கள் கைகளில் ஏற்பட்ட தீப்புண்களைக் காட்டினர். இதற்காக அவனுக்குக் கடுமையான தண்டனை தரும்படி மன்னனை வேண்டிக் கொண்டனர்.



மன்னன் தெனாலிராமனை வரவழைத்து கோபத்துடன், ''பண்டிதர்களை வீட்டிற்கு வரும்படி சொல்லி தானம் தருவதற்குப் பதில் அவர்கள் கைகளில் கொள்ளிக் கட்டையால் சுட்டு தீப்புண்கள் வரவழைத்தாய். ஏன் அப்படிச் செய்தாய்?'' என்று கேட்டார்.



''மன்னா! மன்னிக்கவும். என் தாய் உடல் அரிப்பினால் 'எரிச்சல்' 'எரிச்சல்' என்றபடியே இறந்தாள். தங்களைப் போல பண்டிதர்கள் மூலமாக அவளின் ஆசையை நிறைவேற்றினேன். மாம்பழ தானத்தால் உங்கள் தாயின் ஆசை நிறைவேறியது போல என் சூட்டினால் என் தாயின் ஆசையும் நிறைவேறி, அவளது ஆத்மாவும் சாந்தி அடைந்திருக்கக் கூடும்,'' என்றான் தெனாலிராமன்.

# மூளைக்கு வேலை

*எங்களது அறிவாய்வுப் பகுதி இந்த மாதத்திலிருந்து புதுவிதமாக அமைக்கப் பட்டுள்ளது. உங்களது பதில்களைத் தனியாக ஒரு தாளில் குறித்துக் கொண்டு அடுத்த மாத இதழில் வரும் விடைகளுடன் சரி பார்க்கவும்.*

1. கீழ்க்கண்ட நதிகளில் ஒன்றிற்கு சலேரி, ப்ரன்ஹிதா, இந்திராவதி என்ற கிளை நதிகள் இருக்கின்றன. அந்த நதி எது?

   (அ) கிருஷ்ணா (ஆ) கோதாவரி (இ) காவேரி (ஈ) சபர்மதி

2. பஞ்சாப் - அரியானா இவை இரண்டிற்கும ஒரே தலைநகர் சண்டிகர். சண்டிகருக்கு முன்பு பஞ்சாபின் தலைநகரம் எது?

   (அ) ஜலந்தர் (ஆ) லூதியானா (இ) அமிர்தசரஸ் (ஈ) சிம்லா

3. சுதந்திரத்திற்கு முன் ஆங்கில அரசின் கோடைக்காலத் தலைநகரம் எது?

   (அ) ஸ்ரீநகர் (ஆ) சிம்லா (இ) டெஹ்ராதூன் (ஈ) டல்ஹௌசி

4. இந்தியாவின் தேசிய மரம் எது?

   (அ) வேம்பு (ஆ) மாமரம் (இ) போதி மரம் (ஈ) ஆலமரம்

5. மூங்கில் எந்த வகையைச் சார்ந்தது.

   (அ) மரம் (ஆ) கொடி (இ) பூண்டு (ஈ) புல்

6. 'பதிக்' என்றால் என்ன?

   (அ) ஒருவகையான நெய்யும் முறை (ஆ) சிறிய அளவு வண்ணப்பட்டம்
   (இ) ஒருவகையான சாயம் செய்யும் முறை (ஈ) சிற்பக்கலையின் ஒரு வகை

7. பெங்களூர் இந்தியாவின் 'சிலிகன் வாலி' என்றால் இந்தியாவின் 'இரும்பு நகரம்' எது?

   (அ) சேலம் (ஆ) ரூர்கேலா (இ) ஜாம்ஷெட்பூர் (ஈ) பிலாய்

*(விடைகள் அடுத்த இதழில்)*

## ஜூன் மாத அறிவாய்வின் விடைகள்

1. ஆரவல்லி
2. காவேரி
3. மகாநதி
4. கேரளா
5. கெட்டி
6. வேம்பநாடு
7. மகாபலேஷ்வர்
8. ஷராவதி
9. நவால் சாகர்
10. புந்தேலாஸ்



# குணமே செல்வம்!

முன்னொரு காலத்தில் சோமபுரி நகரில் சோமநாதர் என்ற பணக்காரர் இருந்தார். நல்ல குணமுள்ள அவருக்குப் பல வருடங்களுக் குப் பிறகு ஒரு மகன் பிறந்தான்.

தாய் தந்தையர் அவனைச் சீராட்டி வளர்த்தனர். செல்வமும் பெற்றோரின் செல்லமும் அவனது புத்தியைக் கெடுத்தது. அவனது கர்வம் நாளுக்கு நாள் அதிகமாகியது.

சோமநாதர் மகனின் நடத்தையை நன்றாகக் கவனித்து வந்தார். மகனுக்குத் திருமண வயது வந்தது. திருமணத்திற்கு முன் அவனுக்குப் புத்தி புகட்ட வேண்டும் என்று சோமநாதர் தீர்மானித்தார்.

ஒருநாள் மகனை அழைத்து ''மகனே! நீ பெரியவனாகிவிட்டாய். ஒரு நல்ல பெண்ணைப் பார்த்து உனக்குத் திருமணம் செய்ய வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். இனி தாமதம் செய்யக் கூடாது. கோதண்டபாணி, பலராம் என்று எனக்கு இரண்டு நண்பர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இருவரும் முதலில் செல்வந்தர்களாகவே இருந்தனர். விதிவசத்தால் சில காலமாக அவர்கள் வசதியற்றவர்கள் ஆகிவிட்டனர். ஏழ்மையிலுள்ள அவர்கள் இருவருக்கும் திருமண வயதில் ஒரு பெண் உண்டு. அவர்கள் இருவரில் ஒருத்தியை நீ மணக்க வேண்டும். நான் அவர்களுக்கு ஏற்கனவே வாக்கு கொடுத்திருக்கிறேன். நாம் இருவரும் சென்று அவ்விரு பெண்களையும் பார்த்து விட்டு வருவோம். நீ யாரை விரும்பு

- கபிலன் -



கிறாயோ அவளை திருமணம் செய்து என் வாக்கைக் காப்பாற்றுவது உன் கடமை,'' என்றார்.

தந்தையின் கண்டிப்பான பேச்சை மறுத்த மகன், ''அப்பா! வெகு நாட்களுக்கு முன் நீங்கள் கொடுத்த வாக்கை நான் ஏன் நிறைவேற்ற வேண்டும்? ஏழைகளின் உறவு நமக்கெதற்கு? அவர்களைச் சந்திப்பது வீண்! எனவே அவர்களைப் பார்க்கப் போகவே வேண்டாம்!'' என்றான்.

மகனின் பிடிவாதத்தால் மனம் வருந்திய சோமநாதர், ''மகனே! ஏன் இப்படிச் சொல்கிறாய்? நீ சொன்னபடி செய்தால் 'கொடுத்த வாக்கைக் காப்பாற்றவில்லை' என்று ஊரார் நகைக்க மாட்டார்களா? அது தீராப் பழி ஆகாதா? மற்றவர் முகத்தில் நான் எப்படி விழிப்பேன்?'' என்றதும் அதைத் தட்ட முடியாமல் அந்தப் பெண்களைப் பார்ப்பதற்கு அவன் சம்மதித்தான்.

மறுநாள் இருவரும் குதிரை வண்டியில் அமர்ந்து கோதண்டபாணியின் ஊரான சந்திரபுரிக்குச் சென்றனர். உச்சி வேளையில் வண்டி ஒரு வீட்டின் முன் நின்றது. வண்டியிலிருந்து இறங்கிய சோமநாதர் ''கோதண்டபாணி வீடு எங்கே?'' என்று அந்த வீட்டுக்காரரைக் கேட்டார்.

சோமநாதரை பெரிய பணக்காரர் என்று அறிந்த அவ்வீட்டுக்காரர் மிகவும் பணிவான குரலில் ''நீங்கள் கோதண்டபாணியைப் பார்க்கவா வந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டுவிட்டு மௌனமாகிவிட்டார்.

அவரது எண்ணத்தைப் புரிந்துகொண்ட சோமநாதர் ''நான் அவனுடன் சம்பந்தம் பேச வந்திருக்கிறேன். வண்டியிலிருக்கும் எனது ஒரே மகன்தான் மாப்பிள்ளை,'' என்றார்.

அதைக் கேட்டதுமே அவ்வீட்டுக்காரர் ''அப்படி என்றால் கோதண்டபாணியின் மகளைப் பார்க்கவா வந்திருக்கிறீர்கள்! உள்ளே வந்து உட்காருங்கள்!'' என்று சொன்னார்.

தந்தை, மகன் இருவரையும் உள்ளே அழைத்துச் சென்று நாற்காலியில் அமரச் செய்தார். சமையல் அறையிலிருந்து எலுமிச்சம்பழ ரசம் கொண்டு வந்து ''இதைக் குடியுங்கள்! வெயிலில் வந்திருக்கிறீர்கள்! இந்தக் குளிர்ந்த பானம் உங்கள் களைப்பைப் போக்கிவிடும்,'' என்று உபசரித்தார். அப்போது அவருடைய வயதான

தாய் சோமநாதரை வணங்கியபடி, ''கோதண்டபாணியின் மகள் லட்சுமியை மணக்கப் போகிற பாக்கியவானை நான் பார்க்க வேண்டுமே! லட்சுமி உங்கள் வீட்டில் காலடி வைத்தாலே செல்வம் கொழிக்கும்,'' என்று சொன்னாள்.

அவர்கள் பேச்சினால் மகன் முகத்தில் ஏதேனும் மாறுதல் தெரிகிறதா என்று சோமநாதர் மகனை பார்த்தார். அப்பொழுது வீட்டுக்காரரின் தாய் ''கோதண்டபாணியின் சம்பந்தி நமக்கும் சொந்தக்காரர் தான். எனவே நீங்கள் இங்கேயே சாப்பிடுங்கள்'' என்றாள்.

கோதண்டபாணியின் மகளைப் பெண் பார்க்க வந்திருக்கிறார்கள் என்று அறிந்ததும் ஊரே திரண்டு வந்து, அவர்களை உபசரித்து, அவர் வீட்டிற்கு அழைத்துச் சென்றது.

கோதண்டபாணியின் வீடு சிறியதானாலும் மிகவும் சுத்தமாக இருந்தது. நண்பனைப் பார்த்து கோதண்டபாணி மகிழ்ந்தார். லட்சுமியைப் பார்த்து அவளுடன் பேசியதில் இருந்து அவள் அழகி மட்டுமல்ல, புத்திசாலியும் கூட என்று தெரிந்து கொண்டனர்.

ஒரு மணி நேரம் கழித்து சோமநாதர் மகனுடன் பலராமின் ஊரான அனந்தபுரிக்குக் கிளம்பினார். அங்கு போவதற்குள் இருட்டிவிட்டது. கோதண்டபாணியைப் பற்றி ஊரார் மூலமாகத் தெரிந்து கொண்டது



போல பலராமைப் பற்றி மற்றவர்கள் மூலம் தெரிந்து கொள்ள சோமநாதர் ஆசைப்பட்டார்.

பலராமின் பெயரைக் கேட்டதுமே கிராமவாசி சிடுசிடுத்தபடி ''பல ராமைப் பற்றியா கேட்கிறீர்கள்? எதற்காக அந்த மகானுபாவனைப் பார்க்க விரும்புகிறீர்கள் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?'' என்று கேட்ட அவனது குரலில் கிண்டலும் கேலியும் இருந்தது.

சோமநாதரின் பதிலைக் கேட்ட துமே ''ஐயோ! பலராமுடனா சம்பந் தம் செய்து கொள்ளப் போகிறீர்கள்? போங்கள், உங்களுக்கு நல்ல உப சரிப்பு கிடைக்கும்,'' என்று சொல் லிக் கொண்டே சென்றுவிட்டான்.

சோமநாதர் மேலும் சிலரிடம் பலராமின் வீட்டைப் பற்றி கேட்டார். அனைவரும் அவனைக் கடுமையாக விமர்சித்ததோடு குடிப்பதற்குத் தண் ணீர் கூட கொடுக்கவில்லை.

பெருமூச்சுடன் சோமநாதர் வண்டி யில் அமர்ந்தபடி, ''கோதண்டபாணி சாது, அடக்கமானவன். லட்சாதிபதி யாக இருந்த காலத்திலும் மற்றவர் களுடன் நல்லபடி நடந்து கொண் டதால் மக்கள் இன்றும் அவனுக்கு மரியாதை செலுத்துகிறார்கள், நீ அவன் மகளை மணக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். தந்தை யைப் போலவே லட்சுமியும் அடக்க மாகவும் நற்குணங்களின் இருப்பிட மாகவும் இருக்கிறாள். பலராமோ செல்வச் செருக்கினால் மற்றவர்களை மதிக்கவில்லை. அவன் நல்லபடி நடந்திருந்தால் மற்றவர்கள் அவ னுக்கு உதவ முன்வந்திருப்பார்கள். அவனது வீட்டைக் காட்டவும் யாரும் முன் வரவில்லை. இருப்பினும் கண்டுபிடிக்க முயற்சி செய்வோம்,'' என்று மகனிடம் கூறினார்.

இதைக் கேட்ட சோமநாதரின் மகன், ''வேண்டாம் அப்பா! பலரா மின் வீட்டிற்குப் போக வேண்டாம். எனக்கு கோதண்டபாணியின் பெண் பிடித்திருக்கிறது,'' என்றான்.

பணம் பெரிதல்ல! குணம் தான் பெரிது என்பதை அவனது பேச்சில் இருந்த பணிவின் மூலம் சோமநாதர் அறிந்தார். அவர் மகனின் மாற்றத் தைக் கண்டு மகிழ்ந்தார்.






# மின்னுவதெல்லாம்...

இந்திய ராஜாக்களுக்கும் ராணிகளுக்கும் அழகும் மினுமினுப்பும் கொடுத்தது எது என்று நினைக்கிறீர்கள்? சாதுர்யமோ, புத்திக் கூர்மையோ அல்ல. மற்றவர்களைப் போல அவர்களிலும் அநேகர் மந்த புத்தி உள்ளவர்களாக இருந்திருக்கின்றனர். உண்மையில் அவர்கள் அணிந்த ஆபரணங்களால் தான் ஜொலித்தார்கள்.



கி.மு.3வது நூற்றாண்டில் வாழ்ந்த சாணக்கியன் என்ற புத்திசாலி ராஜதந்திரி தான் இத்தகைய பிரகாசத்திற்குக் காரணமானவர். ஆபரணக் கலை, நாட்டுக் கலைகளைப் பற்றித் தனது 'அர்த்தசாஸ்திர' நூலில் அவர் விபரமாக எழுதியுள்ளார். ஒவ்வோர் அரசனும் தனது நாட்டின் கனிம வளங்களையறிந்து தமதாக்கிக் கொள்ள வேண்டும் என்று எழுதியிருக்கிறார். அரசர்கள் இதை வேதமாக எடுத்துக் கொண்டு, இரத்தினங்கள், உலோகங்கள், கனிம வளங்கள் அனைத்தும் அரச பொக்கிஷத்தில் சேர வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தனர்.



# அஸ்ஸாமின் அபூர்வ நடனக் கலை

நாட்டியத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது பரதநாட்டியம், ஒடிஸி, குச்சிப்புடி, கதக்களி ஆகியவையே நம் மனதில் தோன்றுகின்றன. அஸ்ஸாமின் நாட்டிய நாடகமான சத்திரியாவும் பிரபல நாட்டியமாகும். அது 15ம் நூற்றாண்டில் வாழ்ந்த சங்கரதேவா என்ற வைஷ்ணவ துறவியால் உண்டாக்கப்பட்டது என்று கூறுகின்றனர்.

ஒரு காலத்தில் 'சத்திரியா' ஆண்களால் மட்டுமே நிகழ்த்தப்பட்டு வந்தது. பின்பு பெண்களும் இதைப் பயின்று அரங்கேற்றினர். இது கதக்களியைப் போன்ற நாட்டிய நாடகம். காட்சிகளாகப் பிரிக்கப்படாமல் சூத்ரதாரியின் விளக்கத்தால் தொகுக்கப்படுகிறது.

இந்தியாவின் வடகிழக்கு மாகாணங்களின் நுழைவாயிலான அஸ்ஸாம் பிரதேசத்தை ''நீல மலைகள் சிவப்பு நதி பிரதேசம்'' என்று கூறுவர். சிவப்பு நதி தான் பிரம்மபுத்திரா. இந்தப் பிரதேசத்தைச் சுற்றியுள்ள மலைகள் தாம் நீல மலைகள். இந்தப் பிரதேசத்தின் வடக்கில் அருணாசலப் பிரதேசமும் பூடானும், கிழக்கில் நாகாலாந்து, மணிப்பூர், பர்மாவும், மேற்கில் மேற்கு வங்காளமும் இருக்கின்றன.

அஸ்ஸாம் என்ற சொல் சமஸ்கிருத பாஷையில் 'அஸோம்' என்பதன் மருவு. 'அசோம்' என்றால் நிகரில்லாதது என்று பொருள். மேடு பள்ளம் நிறைந்த மலைகளால் சூழப்பட்ட பூமி, சமவெளி, நதி ஆகியவற்றின் காரணமாக அப்பெயர் வந்திருக்கக் கூடும். மற்றொரு கூற்றின்படி அப்பிரதேசத்தை 600 ஆண்டுகளுக்கு மேல் ஆண்ட 'அகோம்' என்ற பழங்குடியினர் பெயரின் அடிப்படையில் வந்த ஆங்கிலச் சொல் லாகும்.

78,523 சதுர கிலோமீட்டர் பரப்புள்ள இந்தப் பிரதேசத்தின் ஜனத்தொகை 26,638,407. இதன் தலை நகரம் 'திஸ்பூர்'. அஸ்ஸாமியும் பெங்காலியும் இதன் ஆட்சி மொழிகளாகும்.

# மாலா

பிரம்மபுத்திரா நதிக்கரையில் மலை சூழ்ந்த ஒரு கிராமத்தில் சந்திரன் என்றொரு பணக்கார வியாபாரி இருந்தான். அவனுக்கு மாலா என்றொரு அழகான மகள் இருந்தாள்.

மாலாவின் தாய் சிறு வய திலேயே இறந்ததால் காஞ்சனா என்ற கொடூரமான மாற்றாந்தாயிடம் அவள் வளர்ந்தாள். மாலா சாதுவாக இருந்ததால் சித்தியின் கொடுமைகளைப் பொறுமையாகத் தாங்கிக் கொண்டாள். வீட்டு வேலைகள் அனைத்



தையும் அவளே செய்ய வேண்டி இருந்தது.

மாட்டுத் தொழுவம் சுத்தம் செய்வதில் இருந்து துணி தோய்ப்பது, காட்டிலிருந்து விறகு கொண்டு வருவது வரை அவளே செய்து வந்தாள். அப்படியும் சித்தி அவளிடம் அன்பு காட்டவில்லை. எதற்காவது குற்றம் கண்டுபிடித்து அவளை அடிப்பாள்.

வியாபார விஷயமாகச் சந்திரன் அடிக்கடி வெளியூருக்குச் செல்வது வழக்கம். அவன் இல்லாத நேரத்தில் சித்தியின் கொடுமை இன்னும் அதிகமாக இருக்கும். அவளை உட்காரவிடாமல் மேன்மேலும் வேலை கொடுப்பாள்.



பல சமயங்களில் கிராமத்திற்கு வெளியில் உள்ள வயல்களில் வேலை செய்வதற்காகக் கூட அனுப்புவாள். மாலாவிற்கு ஒரு வேளைச் சாப்பாடு தான் கிடைக்கும். உப்பு, மிளகாயுடன் கூட ஒரு கிண்ணம் கஞ்சி தான் அவளது ஒரு நாளைய

# தேயிலை உற்பத்தி



அஸ்ஸாம் என்றதும் நம் நினைவில் தோன்றுவது அங்குள்ள அஸ்ஸாம் தேயிலை தான். உலகில் அதிகமாகத் தேயிலை உற்பத்தி செய்யும் பிரதேசங்களில் அஸ்ஸாமும் ஒன்று. இந்தியாவில் உற்பத்தியாகும் தேயிலையில் 50 சதவீதம் இங்கே உற்பத்தியாகிறது.

உலகிலேயே முதன்முதலாகத் தேயிலைக் கம்பெனி அஸ்ஸாமில் தான் துவக்கப்பட்டது என்று கூறுகின்றனர். 1839ம் ஆண்டு பிப்ரவரி 12ம் தேதியன்று துவக்கப்பட்ட அஸ்ஸாம் கம்பெனியின் நிர்வாகிகளுள் நோபல் பரிசு பெற்ற ரவீந்திரநாத் தாகூரின் பாட்டனார் துவாரகாநாத் தாகூரும் ஒருவராவார். அஸ்ஸாம் தேயிலை நல்ல நிறத்திற்கும் சுவைக்கும் பெயர் போனது.

தற்சமயம் பிரம்மபுத்திரா பள்ளத்தாக்கில் 230,000 ஹெக்டேர் பரப்பளவில் தேயிலைத் தோட்டங்கள் இருக்கின்றன. உலகத்திலேயே பெரிய தேயிலை ஏல மையம் குவாஹாத்தியில் இருக்கிறது.

உணவு. தந்தை இல்லாத நேரங்களில் கோணித் துண்டுகள் தான் அவளது ஆடை. தந்தை வருவதை அறிந்து கொண்டு அவளுக்காக புதுத்துணி வாங்குவாள்.

சித்திக்குத் தோன்றிய போதெல்லாம் தாறுமாறாக அவளை அடிப்பாள். மாலா அத்தனை கொடுமைகளை வாய் திறக்காமல் தாங்கிக் கொண்டாள். இதுபற்றித் தந்தையிடம் கூட ஒரு வார்த்தை சொல்ல மாட்டாள். சித்தியைப் பற்றி யாரிடமும் குறை கூறமாட்டாள்.

மாலா மங்கைப் பருவம் அடைந்தாள். அவளுக்குத் திருமணம் செய்ய வேண்டும் என்று தந்தை நினைத்தான். தகுந்த வரனைத் தேட ஆரம்பித்தான். மாலாவிற்குத் திருமணம் நடந்தால் வீட்டு வேலைகளை யார் செய்வார்? என்று சித்தி மனதிற்குள் புலம்பினாள். மாலாவை வேலைக்காரி போல் நடத்தியது கணவனுக்குத் தெரிந்தால் தன்னைக் கடுமையாகத் தண்டிப்பார் என்பதால் தன் எண்ணத்தை வெளியே சொல்லவில்லை.

பல இடங்களில் தேடி சந்திரன் ஒரு நல்ல வரனைத் தேர்ந்தெடுத்தான். அவன் நல்ல அழகன், புத்திசாலியும் கூட. அவன் பெற்றோர்களிடம் இதுபற்றிப் பேசியபொழுது 'உங்கள் குடும்பத்தில் பெண் எடுப்பதற்கு மிகவும் கொடுத்து வைத்திருக்க வேண்டும்' என்று மகிழ்ச்சியுடன் சம்மதத்தைத் தெரிவித்தனர். இதைக் கேட்டதுமே காஞ்சனா பொறாமையில் பொசுங்கினாள். மாலா ராணி

## கலைகள் - கைத்தொழில்கள்



கைத்தறி நெசவுத் தொழில் மக்களின் முக்கியமான தொழிலாகும். பருத்தி, முகா சில்க், பாட் சில்க், எர்னி சில்க் ஆகியவை கைத்தறி நெசவுத் தொழிலுக்கான மூலப் பொருட்களாகும்.

பொன்னிறத்தில் உள்ள பளபளக்கும் முகா சில்க் ஒவ்வொரு சலவைக்குப் பிறகும் மேலும் மெருகு பெறுகிறது. எர்னி சில்க் வெப்பம் நிறைந்தது, குளிர் காலத்திற்கு ஏற்றது.

மூங்கில் பின்னுதல் மற்றொரு கைத்தொழிலாகும். மூங்கிலால் ஆன சல்லடை, முறம், உடைகள் அன்றாட உபயோகத்திற்கு ஏற்றவை. வயலில் வேலை செய்யும்பொழுது குடியானவர்கள் மூங்கிலால் ஆன தொப்பியை அணிகிறார்கள். அது வண்ணம் நிறைந்த அலங்கார வேலைகள் கொண்டது.



## எண்ணெய் சுத்திகரிப்பு ஆலை

வடக்கு அஸ்ஸாமில் திக்பாய் என்னுமிடத்தில் தான் ஆசியாவிலேயே முதல் எண்ணெய் சுத்திகரிப்பு ஆலை நிறுவப்பட்டது. அதுதான் இந்தியாவில் எண்ணெய்-பெட்ரோல் தொழிலுக்கு அடிப்படையாக அமைந்தது.

பென்ஸில்வேனியாவில் காலோனெல் டிரேக் அவர்களால் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டது. அதற்கு எட்டு ஆண்டுகளுக்குப் பின் 1867ல் திக்பாயில் சுத்திகரிக்கப்படாத குரூட் ஆயில் எடுக்கப்பட்டது. திக்பாயில் எண்ணெய் கண்டுபிடிப்பிற்கு யானை காரணமாக இருந்தது. திப்ரூ-சதியா ரயில் பாதை அமைப்பில் ஈடுபடுத்தப்பட்ட யானை அடர்ந்த காட்டிற்குள் சென்று வந்தபோது அதன் கால்களில் எண்ணெய் இருப்பதைக் கண்டனர். நூறு ஆண்டுகள் கழித்து இன்றும் திக்பாய் தான் இந்தியத் துணைக் கண்டத்தின் பழமையான எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலையாகத் திகழ்கிறது.

யாக வாழ்வதா? நான் இங்கு வேலைகளைச் செய்து கொண்டு வேலைக்காரியாக இருப்பதா? என்று மனதில் புழுங்கினாள்.

மருமகன் புத்திசாலியாகவும், பெண்ணுக்குத் தகுந்தவனாகவும் இருந்தபோதிலும் உலக அனுபவம் இல்லாதவனாக இருந்ததால் அவனையும் அழைத்துக் கொண்டு சந்திரன் பல இடங்களுக்கு வியாபாரத்திற்காகச் சென்றான். பெரிய பெரிய நகரங்களுக்குச் சென்று வியாபாரத்தின் நெளிவு சுளுவுகளை அவனுக்குக் கற்றுத் தந்தான்.

மாலாவின் வளமையான எதிர்காலத்தைப் பற்றி பொறாமை கொண்ட சித்தி அவளைக் கொல்ல வேண்டும் என்று தீர்மானித்தாள். நெல்லைக் குத்திக் கொண்டிருந்தபோது மாலாவின் தலையில் உலக்கையால் அடித்தாள். மாலா இறந்துவிட்டாள்.

ஊரார் முன்னிலையில் தலையிலும் வயிற்றிலும் அடித்தபடி, ''ஐயோ! என் மகள் இறந்துவிட்டாளே! திருமணம் முடிந்து நன்றாக வாழ்வாள் என்று நினைத்தபோது இப்படி ஒரு விபத்து நடந்துவிட்டதே!'' என்று கதறி அழுதாள்.

ஊராரும் அதை ஒரு விபத்தாகக் கருதி அவளுக்கு ஆறுதல் கூறினர். காஞ்சனா, மாலாவின் உடலை வீட்டுத் தோட்டத்திலேயே புதைத்தாள்.

# காசிரங்கா தேசிய பூங்கா

அஸ்ஸாம் நடுப்பகுதியில் 688 சதுர கிலோமீட்டரில் அமைந்த இந்தப் பூங்கா மனிதக்கூட்டத்தினால் அழிக்கப் படாமல் இருக்கிறது. இந்த காசிரங்கா தேசியப் பூங்கா ஒற்றைக் கொம்பு காண் டாமிருகத்தின் இருப்பிடமாகத் திகழ் கிறது. 20ம் நூற்றாண்டில் ஆங்கில ஆட்சிக் காலத்தில் காண்டாமிருகங்கள் அதிக அளவில் வேட்டையாடப்பட்ட தால், அந்த இனமே அழிந்துவிடும் நிலையில் இருந்தது. பின்பு ஆங்கிலே யர்கள் வேட்டையாடுவதைத் தடுத்து மிருகங்களைப் பாதுகாத்தனர். வன விலங்குகளின் சரணாலயமாக 1940ல் அமைந்த இந்தப் பூங்கா 1974ம் ஆண்டு தேசியப் பூங்காவாக மாற்றப்பட்டது. பிரம்மபுத்திரா நதிக்கரையிலுள்ள இந் தப் பூங்காவில் இன்று 1000க்கும் மேற் பட்ட காண்டாமிருகங்கள் இருக்கின் றன. நீர் எருமை, மான், கங்கைப் பிர தேச டால்பின் போன்ற மிருகங்களும் இங்கு இருக்கின்றன.



அந்த இடத்தில் ஒரு பூசணிக் கொடி முளைத்தது. அதில் எண்ணற்ற பூசணிக் காய்கள் தோன்றின. வழிப் போக்கன் ஒருவன் ஒரு காயைத் திருட எண்ணி அதைப் பறிக்கப் போனான். அப்பொழுது ''என்னைத் தொடாதே. நான் பூசணிக்காய் அல்ல. மாலா!'' என்ற குரல் கேட்டது. வழிப் போக்கன் பயந்து ஓடிவிட்டான். மாலாவின் சித்தியும் இதைக் கேட் டாள். ''ஐயோ! என்ன காரியம் செய் தேன்? என் கணவர் வந்து உண்மை தெரிந்தால் என் கதி என்னவாகும்?'' என்று புலம்பியபடி கொடியை வெட்டித் தள்ளினாள்.

சில நாட்கள் சென்றன. அந்த இடத்தில் ஒரு மிளகாய்ச் செடி தோன்றியது. செடி முழுவதும் கொத் துக் கொத்தாக மிளகாய் காய்த்தன. மாடு மேய்ப்பவர்கள் அதிலிருந்து மிளகாய் பறிக்க வந்தனர். அப் பொழுது ''ஐயையோ! என்னைத் தொடாதீர்கள். நான் மிளகாய் அல்ல, மாலா!'' என்ற குரல் கேட்டு மாடு மேய்ப்பவர்கள் அது மாலாவின் ஆவி என்று எண்ணி ஓடிவிட்டனர். பின் மாலாவின் சித்தி அந்தச் செடியை வெட்டி பிரம்மபுத்திரா ஆற்றில் எறிந்தாள்.

நதியில் விழுந்த மிளகாய்ச் செடி

நீரில் மூழ்கியது. சில நாட்கள் சென்று அந்த இடத்திலிருந்து ஓர் அழகான தாமரைத் தண்டு முளைத்தது. நீரில் மேல் அதன் இரண்டு வட்டமான இலைகளுக்கு நடுவில் ஒரு தாமரை மொட்டு தோன்றியது. அது மலர்ந்து அனைவரின் கவனத்தையும் கவர்ந்தது. நதியின் நடுப்பகுதியில் இருந்ததால் ஒருவரும் அதனைப் பறிக்க முடியவில்லை.

வியாபாரத்தை முடித்துக் கொண்டு மகளின் திருமணத்திற்கான நகை, புடவைகளை சந்திரன் வாங்கிக் கொண்டான்.

சந்திரனும் இளைஞனும் படகில் பிரம்மபுத்திராவைக் கடந்து ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந்தனர். நதியில் அழகான தாமரை ஒன்றைக் கண்டு அந்த இளைஞன் அதைப் பறிக்கக் கையை நீட்டினான்.



## சுற்றுலா தலம்

பார்க்க வேண்டிய இடங்களில் 160 மீட்டர் உயரத்தில் நீலாச்சல் மலையில் உள்ள காமாக்யா கோயில் மிகவும் முக்கியமானது. இந்தியாவில் உள்ள சக்தி பீடங்களில் இது வும் ஒன்று. சக்தி ஸ்வரூபியான காமாக்யா (காமாக்ஷி) இங்குள்ள தேவதையாகும்.

அப்பொழுது, ''நில், என்னைத் தொடாதே! நான் தாமரை அல்ல, மாலா!'' என்ற குரல் கேட்டது. இளைஞன் திகைத்தான். மாலாவின் தந்தைக்கு அது மாலாவின் குரல் தான் என்று புரிந்தது. மாலா இறந்தது அவனுக்குத் தெரியாததால் ''மாலா! நீ எங்கே இருக்கிறாய்? இங்கு உன் குரல் எப்படி? என்னிடம் ஓடி வா!'' என்றான்.

தந்தையின் பாசமான குரல் கேட்டு தாமரை மலர் மாலாவாக மாறியது. ஓடிப்போய்த் தந்தையைக் கட்டித் தழுவி நடந்தவற்றை எல்லாம் மாலா சொன்னாள். தன் மகளுக்கு நேர்ந்த கதியினால் சந்திரன் மிகவும் கோபம் கொண்டான்.

அவர்கள் வீட்டை அடைந்த பொழுது காஞ்சனா, மாலாவை வாயிலில் பார்த்தபொழுது திகைத்துப் போனாள். சந்திரன் அவளை வீட்டை விட்டுத் துரத்தினான். மால்ாவின் திருமணம் இனிதே நடந்தது.

# செய்திச் சுடர்

## சமனக் கலை



பள்ளி வருடாந்திர விளையாட்டுப் போட்டிகளில் கையில் தேக்கரண்டி பிடித்து அதன் மேல் உள்ள எலுமிச்சம் பழம், குறிப்பிட்ட இடத்திற்குச் செல்லும் வரை கீழே விழாமல் சென்று முதலாதாக வர வேண்டும் என்ற ஒரு போட்டியை நீங்கள் பார்த்திருப்பீர்கள். பழம் கீழே விழுந்தால் போட்டியிலிருந்து விலக வேண்டும். இதுபோன்று 10 அங்குல உயரமுள்ள பாட்டிலை தலையின் மீது வைத்துக் கொண்டு (பால் நிறைந்த பாட்டில்) குறிப்பிட்ட தூரம் வரை செல்ல வேண்டும் என்ற போட்டியில், பாட்டில் கீழே விழாமல் வெற்றிக் கோட்டை அடைபவருக்குப் பாலுடன் பரிசும் கிடைக்கும்.

ஆஸ்திரேலியாவில் சிட்னியில் நடந்த இந்தப் போட்டியில் இந்தியாவில் பிறந்த சுரேஷ் ஜவோசிம் என்ற இளைஞர் பால் பாட்டிலுடன் 133 கிலோமீட்டர் நடந்து வெற்றி பெற்றார் என்றால் ஆச்சரியமாக இல்லை! வெற்றிக் கோட்டை அடைந்த போது பால் கெட்டுப் போயிருக்கலாம். ஆனால் அவர் பரிசையும் வென்று கின்னஸ் புத்தகத்திலும் இடம் பெற்றுள்ளார்.

## எறும்புகளுக்கு ஓர் அருங்காட்சியகம்



அது எறும்பளவு உள்ள காட்சியகம் அல்ல. 100,000 எறும்புகளைக் கொண்ட காட்சியகமாகும். இந்தக் காட்சியகம் தாய்லாந்திலுள்ள கசேத்-சார்ட் பல்கலைக் கழகத்தில் இருக்கிறது. காட்டு இலாகா இந்தக் காட்சியகத்தைப் பாதுகாத்து வருகிறது. கிட்டத்தட்ட 100 எறும்புக் குடும்பங்கள், 550 வகை உயிருள்ள எறும்பு கள் இங்கு இருக்கின்றன. மேலும் 100,000 எறும்புகள் பாட்டில்களில் பாதுகாத்து வைக்கப்பட்டிருக் கின்றன.

தாய்லாந்து செல்ல வாய்ப்புக் கிடைத்தால் (வெள்ளை யானைக்குப் பெயர் பெற்ற சயாம் நாடு) எறும்பு அருங்காட்சி யகத்தைக் காணத் தவறாதீர்கள்.



# விநாயகர்

ஒருநாள் நாரதர் கைலாசத்திற்குச் சென்று கொண்டு இருந்தார். வழி யில் கண்டமுகி என்ற யட்சிணி அவரைப் பார்த்து கேலியாக, ''நார தரே! என்னை மணந்து கொள்வீரா? ஹே! பிரம்மாவின் மைந்தா, என்னை மணந்து கொண்டு பிரம்மாவின் பந் தத்திலிருந்து விமோசனம் பெற்றுக் கொள்ளுங்கள்,'' என்றாள்.

அதற்கு ''நான் கலகப் பிரியன். என்னைப் போன்று கலகம் செய் பவள் ஒருத்தி கிடைத்தால் மணந்து கொள் ளலாமே!'' என்று நாரதரும் கேலி யாகப் பதில் கூறினார்.

''நான் உங்களை விடவும் சண் டைக்காரி, கலகக்காரி,'' என்று யட் சிணி கூறினாள்.

அந்த வேளையில் விநாயகரும் குமாரசுவாமியும் கைகோர்த்துக் கொண்டு சென்று கொண்டிருந்தனர். அதைப் பார்த்த நாரதர், யட்சிணி யிடம் ''இந்த இரண்டு சகோதரர் களுக்குள் சண்டை உண்டு பண்ண முடியுமா உன்னால்?'' என்றார்.

''ஹூம். இது என்ன பெரிய விஷயம்? உடனே செய்து காட்டு கிறேன், பாருங்கள்!'' என்று கூறிய படி அருகி லிருந்த குளத்தில் மூழ்கி தங்கத் தாமரையாகத் தோன்றி ''நான் பார்வதி-பரமேஸ்வரரின் புத்திரருக் காக மலர்ந்திருக்கிறேன்,'' என்று கூறினாள்.

இதைக் கேட்டதும் இரு சகோதரர் களும் ''இது என்னுடையது! இது என்னுடையது!'' என்று சண்டை யிடத் தொடங்கினர். ''ஹே! கணேசா!



நீ அம்மாவினால் செய்யப்பட்ட பொம்மை. அழுக்கின் சிகரம்,'' என்று குமாரசுவாமி சொன்னார்.

அதற்கு விநாயகர் ''நீயோ அழுக்கு நிறைந்த சரவணப் பொய்கையில் தோன்றினாய்,'' என்றார்.

குமாரசுவாமி தமது முட்டியினால் விநாயகரைத் தாக்கினார். விநாயகரோ தமது தும்பிக்கையினால் குமாரசுவாமியின் இடுப்பை வளைத்து உயரே தூக்கினார். குமாரசுவாமி விநாயகரின் தொந்தியில் தலையினால் மோதினார். நாரதர் ஓடோடி வந்து, ''நீங்கள் ஏதாவது ஒரு பந்தயம் வையுங்கள்,'' என்றார்.

குமார சுவாமி, ''சரி! இந்த உலகத்தை எவன் ஒருமுறை சுற்றி வருகிறானோ அவனுக்குத் தான் இந்தத் தங்கத் தாமரை சொந்தம்,'' என்றார்.

''இது சரியான போட்டி!'' என்று நாரதர் சொன்னார். உடனேயே மயிலில் ஏறி உலகம் சுற்றுவதற்காகக் குமாரசுவாமி கிளம்பிவிட்டார். விநாயகரோ கவலை தோய்ந்த முகத்துடன் உட்கார்ந்துவிட்டார்.

''விநாயகரே! நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று கேட்ட நாரதரிடம் ''முனிவரே! யாருக்கு எது கிடைக்க வேண்டுமோ அதுதான் கிடைக்கும். இந்நத் தொந்தியுடன் மூஞ்சூரில் அமர்ந்து என்னால் உலகை எப்படிச் சுற்ற முடியும்? எனது தம்பிக்கே தங்கக் கமலத்தைக் கொடுத்துவிடுங்கள்,'' என்று விநாயகர் கூறினார்.

இதைக் கேட்டு ''விக்னபதியே! நான் பார்வதி-பரமேஸ்வரனைப் பார்க்கச் செல்கிறேன். பிறகு வருகிறேன்!'' என்று கூறி நாரதர் அங்கிருந்து சென்றுவிட்டார்.

இதற்குப் பின் விநாயகருக்கு என்ன தோன்றியதோ? உடனே சென்று ஆசனத்தில் அமர்ந்திருந்த பார்வதி-பரமேஸ்வரரை மும்முறை வலம் வந்து வணங்கினார். தம்பியின் வருகைக்காக அங்கேயே காத்திருந்தார்.

பல இன்னல்களுக்கிடையே உலகைச் சுற்றிவிட்டு நீண்ட நேரம் சென்று குமாரசுவாமி அங்கு வந்தார். அவரைத் தழுவியபடி ''மிகவும் கஷ்டப்பட்டு உலகைச் சுற்றிவிட்டு வந்திருக்கிறாய்! நீயே தங்கக் கமலத்தை எடுத்துக் கொள். போட்டியில் என்னமோ நான்தான் ஜெயித்திருக்

கிறேன். ஆனாலும் எனக்கு இந்தத் தாமரை வேண்டாம்,'' என்று விநாயகர் கூறினார்.

''அது எப்படி நீ ஜெயித்தாய்?'' என்ற குமாரசுவாமியிடம், ''உனக்கு முன்பே நான் உலகத்தை மூன்று முறை சுற்றிவிட்டேன். சந்தேகம் இருந்தால் மற்றவர்களிடம் கேள்!'' என் றார். அதே சமயம் ''விநாயகர் ஜெயித்தார்!'' என்ற குரல் ஆகாயத்தில் இருந்து மும்முறை ஒலித்தது.

குமாரசாமி உண்மையைப் புரிந்து கொண்டார். விநாயகரை சாஷ்டாங்கமாக வணங்கினார். பிறகு ''அண்ணா! நான் கடுமையாகத் தவம் செய்து பிரம்ம ஞானம் பெற்றிருக்கிறேன். நீங்களோ கூர்மையான புத்தி உடையவராக இருக்கிறீர்கள்? நீங்கள் தான் முதல்வர். இப்பொழுது தாரகாசுரனுடன் போர் செய்யப் போகிறேன். என்னை ஆசீர்வதியுங்கள்,'' என்றார்.

விநாயகர் ''தம்பி! நான் பெரியவன், நீ சிறியவன் என்ற எண்ணமே நம் மனதில் வரக் கூடாது. நீ ஒரு காரணத்திற்காக அவதரித்திருக்கிறாய். நீ சொன்னபடி நானோ அம்மாவால் செய்யப்பட்ட பொம்மை தான்.

உன் காரணமாகத்தான் பார்வதி பரமேஸ்வரரின் திருமணம் நடைபெற்றது. நீ அவர்களின் பிரிய புத்திரன். உன்னுடைய வெற்றி முதலிலேயே நிச்சயிக்கப்பட்டுள்ளது. உன்னுடைய கைகளால் இறக்க வேண்டும் என்று தாரகாசுரன் வரம் பெற்றிருக்கிறான்.



நீ தான் சுப்ரமண்யேஸ்வரர். எனக்காக எங்கு பார்த்தாலும் கோயில்கள் இருக்கும். உனக்கோ பெரிய தீர்த்த ஸ்தலங்களில் பெரிய கோயில்கள் இருக்கும். முக்கியமான கடவுளாக நீ வணங்கப்படுவாய். சீக்கிரமாய் தாரகாசுரனை வதம் செய்!'' என்று சொன்னார்.

இதன்பின் தேவர்களின் சேனாதிபதியாகி குமாரசாமி தாரகாசுரனை வதம் செய்யச் சென்றார். யட்சர்களின் அதிபதியான குபேரன், யட்சிணியின் மூலம் ஏற்பட்ட கலகத்திற்காக அவளை முட்செடியாகிப் போகும்படி சபித்தார்.

கண்டகமுகி சாப விமோசனம் தரும்படி கேட்டாள். அதற்கு விநாயகரால் தான் அவளுக்குச் சாப விமோசனம் என்று குபேரன் கூறினார்.



உடனே கண்டகமுகி முட்செடியாகத் தோன்றினாள்.

தாரகாசுரனை வென்றபின் இந்திர னின் மகள் தேவயானியுடன் குமார சுவாமியின் திருமணம் நடத்துவதற் கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ''அண்ணனுக்குத் திருமணம் ஆகா மல் நான் எப்படி மணம் செய்து கொள்ள முடியும்?'' என்று குமார சுவாமி திருமணத்தை நிறுத்தி வைத்தார்.

பார்வதி ''மகனே! நீ மணம் செய்து கொண்டால் தான் தம்பியின் திரு மணம் நடைபெறும். எனவே நீ திருமணம் செய்து கொள்,'' என்று விநாயகரிடம் சொன்னாள்.

''ஏன் வேண்டாத சட்ட திட்டங் களை எல்லாம் நீங்கள் மதிக்கிறீர் கள்? தும்பிக்கையும் ஒரு தந்தமும் உடைய எனக்கா திருமணம்?'' என்று தாயிடம் விநாயகர் கூறினார். திரு மணத்தைத் தடுப்பதற்காகப் பல விதக் காரணங்களையும் சாக்குப் போக்குகளையும் சொல்லலானார். அம்மாவின் வேண்டுகோளை நிரா கரிக்க முடியாத நிலையில் ''அம்மா! தம்பி கடும்தவம் செய்திருக்கிறான். நான் ஒன்றுமே செய்யவில்லை. எனவே தவம் செய்யப் போகிறேன்,'' என்று கூறி தவம் செய்வதற்காக வனம் சென்றார்.

அவரது தவத்தைத் தடுப்பதற்காக இந்திரன் தேவகன்னிகளை அனுப்பி னான். அர்க் என்ற தேவகன்னிகை மட்டும் அதை மறுத்துவிட்டாள். ''நீ எருக்கஞ்செடியாக மாறுவாயாக!'' என்று தேவேந்திரன் அவளுக்குச் சாபம் கொடுத்தான்.

விநாயகர் முட்செடிகள் நிறைந்த இடத்தில் தவம் செய்யலானார். அங்கு எருக்கஞ்செடிகளின் கூட்டத் தில் மொட்டுக்கள் நிறைந்திருந்தன.

தேவ கன்னிகைகள் அங்கும் வந்து தவத்தைக் கெடுக்க முயற்சித்தனர். அவர்கள் கால்களில் முட்கள் குத்தவே கூச்சலிட்டனர். அந்தக் கூச்சலால் விநாயகரின் தவம் கலைந்தது. கண் விழித்துப் பார்த்தார். தேவ கன்னிகை கள் பயந்து ஓடிவிட்டனர்.

முட்செடியாக இருந்த கண்டக முகி ''ஐயனே! சகோதரர்களாகிய குமாரசுவாமி உங்களிடையே கலகம் உண்டுபண்ணியதற்காக குபேரன் எனக்கு இவ்வாறு சாபம் கொடுத்தார். எனக்கு விமோசனம் தாருங்கள்!'' என்றாள்.



அன்று ஆவணி மாதம் சுக்கில பட்ச நான்காம் நாள். அன்று தான் விநாயக சதுர்த்தி. எனவே கண்டக முகிக்கு விமோசனம் அளித்தார்.

இதன் பிறகு எருக்கஞ்செடியாக இருந்த அர்க் என்ற தேவகன்னிகை, ''இந்திரனின் சாபத்தால் இந்த வடிவம் எடுத்துள்ளேன். உங்கள் பக்தையான எனக்கு விமோசனம் தாருங்கள்!'' என்றாள்.

அவளுக்கு சாப விமோசனம் கொடுத்தபடி ''உன் நினைவாக யாரும் தொடாத எருக்கம்பூ மாலையையும் நான் சதுர்த்தி அன்று அணிந்து கொள்வேன். நீ துவாபர யுகத்தில் குப்ஜாவாகப் பிறந்து கிருஷ்ணனால் ஏற்றுக் கொள்ளப் படுவாய். எருக்கன் வேர் மருந்துக்கு உதவும். எருக்க இலை சூரியனுக்கு உகந்ததாக இருக்கும்,'' என்று கூறி அவளை அனுப்பி வைத்தார்.

தவத்தை மேலும் தொடர எண்ணி பாம்புப் புற்றுகள் நிறைந்த இடத்திற்குச் சென்றார். பாம்புகள் படம் எடுத்தபடி அவருக்குப் பாதுகாப்பாக நின்றன. இந்திரன் மூஷிகாசுரன் என்ற அரக்கனை விநாயகருக்கு எதிராகச் சண்டை செய்யுமாறு தூண்டினான். ராட்சஸன் விநாயகருடன் போரிட வந்தபோது நாகலோகத்திலுள்ள அத்தனை நாகங்களும் அரக்கர்களுடன் மோதின. அநேகர் மடிந்தனர். மிஞ்சிய சிலரும் இந்திரனைச் சபித்தபடி ஓடி ஒளிந்தனர்.

இதன்பின் இந்திரன் தேவர்களையும் தேவ கன்னிகைகளையும் ஜோடி

யாக விநாயகர் முன் சென்று அவர் மனத்தில் ஆசையை உண்டு பண்ணும் படி ஆணையிட்டான். அவனும் வஜ்ஜிராயுதம் எடுத்துக் கொண்டு சென்றான்.

நாகக் கூட்டம் தேவர்களை விரட்டியடித்தன. வஜ்ஜிரயுதத்தால் நாகங்களைக் கொல்ல இந்திரன் முயற்சித்த போது நாகலோகத்திலுள்ள அத்தனை சர்ப்பங்களும் அவனை நோக்கிச் சீறின. வஜ்ஜிராயுதத்திற்கு அஞ்சாமல் சொர்க்கலோகத்தையே நாகப்படை முற்றுகையிட்டது.

இதைக் கண்டு மகிழ்ந்த விநாயகர் அவைகளை கையில் எடுத்து முத்தமிட்டார். அவைகளையே ஆபரணங்களாக அணிந்து கொண்டு விநாயகர் கைலாசம் சென்றார்.

பாம்புப்பிடாரன் ரூபத்தில் தன்னைப் பார்த்து வியந்த அன்னையிடம் ''அம்மா! அப்பாவின் சொத்து பிள்ளைக்குத் தானே? சங்கராபரணம் எனக்கும் ஆபரணமே!

தவிர தங்களுடைய உயிரைப் பணயம் வைத்து என்னைக் காத்ததால் இவைகள் என்னுடைய நண்பர்கள். இவைகளை அணிவதால் மக்கள் என்னை 'நாகபூஷணம்' என்று கூறுவர்,'' என்றார்.

சிவனார் அதுகேட்டு புன்னகை புரிந்தார். விநாயகரும் தம் திருமணம் நடக்காமல் இருக்க என்னவெல்லாம் செய்ய முடியுமோ அவற்றையெல்லாம் செய்து வந்தார்.

திருமணம் செய்து கொள்ளும்படி மறுபடியும் தாய் கேட்டபோது, ''பெரிய காரியம் செய்பவர்களைத் தான் கெட்டிக்காரன், சாமர்த்தியசாலி என்பர். அப்படி நான் எதுவும் செய்யவில்லையே! நானும் தம்பியைப் போல் பெரிய காரியம் செய்த பின் சாமர்த்தியசாலியாவேன். பின்பு திருமணம் செய்துகொள்கிறேன்,'' என்று விநாயகர் கூறினார்.

''நீ மட்டும் மகான் இல்லையா? உனக்கு என்ன குறை? உனக்கு சாமர்த்தியமும் புத்திபலமும் இருக்கிறதே!'' என்றபடி பார்வதி அவரைத் தழுவிக் கொண்டாள்.

(தொடரும்)





# சாவித்திரியின் புத்திசாலித்தனம்

கீதாவிற்கும் குமாருக்கும் திரு மணம் நடந்து ஒரு வருடம் கூட ஆகவில்லை. அதற்குள்ளேயே எலி யும் பூனையுமாக இருந்தனர். காலை யில் எழுந்தது முதல் இரவு படுக்கும் வரையில் சண்டையும் சச்சரவும் தான்.

ஒருநாள் கீதா ஒரு பூனையை வளர்ப்பதற்காக ஆவலோடு கொண்டு வந்தாள். ஆனால் குமார் அதை எங்கோ விட்டுவிட்டு ஒரு நாய்க் குட்டியை கொண்டு வந்தான்.

அதற்கு கீதா சாப்பிட ஒன்றும் கொடுக்கமாட்டாள். கத்தினால் தடி யால் அடிப்பாள். ஒருமுறை அவள் நாயை அடித்த போது கோபம் கொண்ட குமார் அதே தடியால் கீதாவையும் அடித்தான்.

அலறிக் கொண்டு அவள் அடுத்த தெருவிலுள்ள தனது அண்ணன் ரவி யின் வீட்டிற்குச் சென்றாள். இல்லா தது பொல்லாதது சொல்லி ரவியிடம் புலம்பினாள். ரவி மிகவும் சாது. சண்டைப் பக்கமே போகமாட்டான். எனவே அவன் குமாரை அழைத் துப் புத்தி சொன்னான். குமாரும் அதை ஏற்று கீதாவை அழைத்துச் சென்றான்.

சில நாட்கள் அமைதியாகச் சென் றன. மறுபடியும் சண்டை, பூசல், அழுகை. கீதா மீண்டும் மீண்டும் அண்ணன் வீட்டிற்குச் சென்று தங்க லானாள். ஊரார் இதுபற்றி கண்டபடி பேசினர். ரவியைப் பற்றியும் அவ தூறாகப் பேசினர். என்ன செய்வ தென்று தெரியாமல் ரவி சிந்தனை யில் ஆழ்ந்தான். ரவியின் வருத்தத் தைப் பார்த்த அவன் மனைவி சாவித் திரி கீதாவின் செயல் தான் காரணம் என்று புரிந்து கொண்டாள்.

''இந்த விஷயத்திற்காகவா நீங்கள்



வருந்துகிறீர்கள்? நான் ஓர் உபாயம் சொல்கிறேன். அதன்படி நடந்தால் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண லாம்,'' என்று அவன் காதில் ஏதோ சொன்னாள்.

மறுநாள் காலை வழக்கம் போல கணவனுடன் சண்டை போட்டுக் கொண்டு கீதா அண்ணன் வீட்டிற்கு வந்தாள். வீட்டில் நுழைந்ததுமே அவள் திகைத்தாள். பொருட்கள் தாறுமாறாகக் கிடந்தன. பக்கத்து அறையில் அண்ணனும் அண்ணியும் உரத்த குரலில் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர்.

தன் குறையைப் பற்றிச் சொல்ல வந்தால் இங்கு என்ன இப்படி நடக் கிறது என்று எண்ணியபடி அவள் அண்ணன் அறைக்குச் சென்றாள். அங்கு ''என்ன நினைத்து என்னை அடிக்க வருகிறீர்கள்?'' என்று சாவித் திரி கத்தினாள். அதற்கு ரவி, ''பின்னே என்ன? சாமான்களை உடைத்து நொறுக்கியிருக்கிறாயே! உனக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது?'' என்றான்.

சாவித்திரி, ''ஆமாம்! கல்யாணத் திற்குப் பின் தான் பைத்தியம் பிடித் திருக்கிறது. உங்கள் குடும்பம் கீழ்த் தரமானது என்று என் பெற்றோருக்குத் தெரியாமல் போயிற்றே!'' என்றாள்.

''ஏன், என் குடும்பத்தை வம்புக்கு இழுக்கிறாய்?'' ரவியின் குரலில் கடுமை இருந்தது. ''இன்னும் என்ன வேண்டும்? உங்கள் குடும்பமே பைத் தியம் தான். ஒருவருக்கும் ஒழுங்காக வாழத் - தெரியாது,'' என்றாள் சாவித்திரி.

''என் குடும்பத்தைப் பற்றிப் பேசாதே! கெட்ட கோபம் வரும்,'' என்று ரவி கத்தினான். ''வீணாக கத்துவதால் மட்டும் உண்மை பொய் யாகிவிடுமா? ஊரே உங்கள் தங்கை யையும் உங்களையும் பற்றிக் கண்ட படி பேசுகிறார்களே!'' என்றாள் சாவித்திரி.

''என்ன பேசுகிறார்கள்? சொல், பார்ப்போம்!'' என்றான் ரவி. ''தெரி யாதது போல பாசாங்கு செய்யா தீர்கள்! உங்கள் தங்கை கீதா கண வனுடன் வாழத் தெரியாமல் சண்டை போட்டுக் கொண்டு அடிக்கடி இங்கு ஓடி வருகிறாள். நீங்களும் ஒன்றும் சொல்லாமல் இருக்கிறீர்கள். அப்படி நீங்கள் சண்டை போடும்போதெல் லாம் நானும் என் வீட்டிற்குப்

போகலாமே!'' என்றாள் கீதா.

''நான் என்ன செய்ய முடியும்? குமாருக்கு கீதாவுடன் வாழத் தெரிய வில்லையே!'' என்று ரவி சொன் னான். ''அவர் பெயரில் ஏன் வீணாகப் பழி போடுகிறீர்கள். அவர் செய்யும் ஒவ்வொன்றையும் உங்கள் தங்கை தப்பாகப் புரிந்து கொண்டு சண்டை போடுகிறாள். சமையல் கூட ஒழுங் காகச் செய்வதில்லை. எப்பொழுது பார்த்தாலும் கதைப் புத்தகமும் தூக்க மும் தான். ஒரு நாளாவது அவருடன் சந்தோஷமாகப் பேசியிருக்கிறாளா?'' என்றாள் சாவித்திரி.

''அதற்கு என்னை என்ன செய்யச் சொல்கிறாய்? குமாருக்கு அடக்கத் தெரியவில்லை,'' என்று ரவி சொன் னான். சாவித்திரியோ, ''அடக்கத் தெரியும். ஆனால் உங்கள் மனம் புண்படக் கூடாதென்று தான் சும்மா விட்டு வைத்திருக்கிறார். அதைத் தெரிந்து கொண்டு தான் கீதா இங்கு வந்துவிடுகிறாள். அவள் முதலில் வந்தபோதே நீங்கள் அவளுக்கு அறி வுரை சொல்லி அண்ணன் வீட்டிற்கு கணவனுடன் சண்டை போட்டுக் கொண்டு வரக்கூடாது. இது தங்கு வதற்கான சத்திரம் இல்லை என்று சொல்லியிருக்க வேண்டும்,'' என்று கூறினாள்.

அதற்கு ரவி, ''சரிதான் போ! நீ ஒன்றும் எனக்குப் புத்தி சொல்ல வேண்டாம். எனக்கிருப்பது ஒரே தங்கை. அவளை நான் எப்படி கடுமையாகத் திட்ட முடியும்? தாய், தந்தை இல்லாத அவளை நான் தானே வளர்த்தேன். அவள் கண் கலங்கினால் என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது. முடிந்தால் நீயும்



என்னுடன் ஒத்துப் போ! இல்லாவிட்டால்...'' என்று கூறி முடிக்கு முன் சாவித்திரி, ''இல்லாவிட்டால் என்னைத் துரத்திவிடுவீர்களா? அதையும் செய்யுங்கள். என் பெற்றோர் என்னை சந்தோஷமாக வைத்துக் கொள்வார்கள். ஆனால் உங்களால் இந்த ஊரில் நல்ல பெயருடன் வாழ முடியாது,'' என்றாள்.

இதைப் பொறுக்க முடியாமல் கீதா, ''அண்ணா! இதை எப்படிப் பொறுத்துக் கொள்கிறாய்? முதலில் இவளை வீட்டை விட்டுத் துரத்த வேண்டாமா?'' என்றாள். உடனே ரவி, ''இதோ பார் கீதா! இது கணவன், மனைவிக்குள் ஏற்பட்ட சண்டை. நீ எப்படிக் குறுக்கிடலாம். உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ!'' என்று கூறினான்.

கீதாவிற்கு அவமானமாக இருந்தது. கூடப்பிறந்த அண்ணனே இவ்வாறு பேசுகிறானே என்று புழுங்கினாள். அப்போது ''எங்களுக்குள் ஆயிரம் இருக்கும். இன்று சண்டை போடுவோம், நாளைக்குச் சேருவோம். இதில் மற்றவர்களின் தலையீடு தேவையில்லை. அது சரி, நீ ஏன் இங்கு வந்தாய்?'' என்று ரவி கேட்டான்.

தான் வந்த காரணத்தைக் கூறாமல் ''இல்லை. நாங்கள் ஹரித்துவாருக்குப் போகிறோம். நீங்கள் வருகிறீர்களா என்று கேட்க வந்தேன். இங்கு நிலைமை விபரீதமாக இருக் கிறது. நான் வருகிறேன்,'' என்று கூறிவிட்டு கீதா வீட்டிற்குச் சென்றாள்.

ஆயிரமானாலும் கணவன் வீடுதான் பெண்ணுக்குச் சொந்தம் என்பதைப் புரிந்து கொண்ட கீதா குமாரிடம் அன்பாக நடந்து கொண்டாள். குமாரும் கீதாவும் தங்கள் பாவத்தைக் போக்க ஹரித்துவாருக்குக் கிளம்பினார்கள்.

அவர்கள் போவதைப் பார்த்த ரவி ''சாவித்திரி! உன் புத்திசாலித்தனத்தால் தான் ஒரு குடும்பத்தில் ஒற்றுமை வந்தது என்று மனைவியைப் புகழ்ந்தான்.



# சேகரின் பரிசு

அக்கம்பக்கத்து கிராமங்களில் வசித்த சேகரும் சங்கரும் நெருங்கிய நண்பர்கள். விவசாயத்திலும் நிபுணர்கள். பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை நகரத்திற்குச் சென்று காய்கனிகளை விற்று வருவார்கள். ஒருமுறை நகரிலிருந்து திரும்பும்போது சேகர் மனைவிக்காகப் புடவையும், ஒரு தங்க மோதிரமும் வாங்கினான்.

அதைப் பார்த்த சங்கர், ''ஏன் இதையெல்லாம் வாங்குகிறாய். நீ வாங்குவது அவளுக்குப் பிடிக்காவிட்டால் என்ன செய் வாய்?'' என்று கேட்டான். ''ஏன் பிடிக்காது! சில தடவை இப்படிப்பட்ட பரிசுகள் கொடுத்தால்தான் அவர்கள் மகிழ்வார்கள். அவர்களைச் சந்தோஷப் படுத்துவது நமது கடமை அல்லவா?'' என்றான் சேகர்.

அவனது பதில் சங்கருக்குச் சரியென்று தோன்றியது. சங்கரும் மனைவிக்கும் குழந்தைகளுக்கும் பரிசுகள் வாங்கினான். இருவரும் சந்தோஷமாகத் திரும்பி வந்தனர்.

வீட்டிற்கு வந்ததும் சங்கர் பொருட்களை மனைவியிடம் கொடுத்தான். அவைகளைப் பார்த்து அழுதபடி, ''இன்று யார் முகத்தில் விழித்தேனோ? பையன் முருகனை தெருவில் உள்ள சிறுவர்கள் அடித்தனர். கயிறு அறுந்து குடம் கிணற்றில் விழுந்தது. நீங்கள் என்னவென்றால் சம்பாதித்த பணத்தை விரயம் செய்துவிட்டு வந்திருக்கிறீர்கள். கையில் ரொக்கப் பணம் இருக்க வேண்டுமென்று உங்களுக்குத் தெரியாதா?'' என்று கூறியபடி கண்ணீரைத் துடைக்கலானாள்.

*– சரளா*





# அவனே மனிதன்!

நாட்டு வைத்தியர் நாகசாமி சிறந்த வைத்தியர். அவருடைய வைத்தியம் அவர் இருந்த ஊரைச் சுற்றிப் பல மைல்கள் பரவி பிரசித்தி பெற் றிருந்தது. அவரும் ஏழை பணக்காரர் என்ற வித்தியாசம் பாராட்டாது வைத்தியம் பார்த்து வந்தார். இதனால் நாளடைவில் அவருக்குப் பேரும் புகழும் ஏற்பட்டு விட்டது.

இவ்வாறு நாகசாமி புகழ் பெறு வது அவ்வூர் ஜமீன்தாருக்குப் பிடிக்க வில்லை. முன்பெல்லாம் மக்கள் ஜமீன்தாரைப் பற்றித் தான் பேசி வந்தனர். ஆனால் நாகசாமியின் வைத்தியம் புகழ் அடைந்தது முதல் எல்லோரும் நாட்டு வைத்தியர் நாக சாமியைப் பற்றித்தான் பேசினார் களே தவிர ஜமீன்தாரின் அருமை பெருமைகளைப் பற்றி யாரும் பேசு வதாகத் தெரியவில்லை. தன் புகழ் பரவத் தடையாக இருக்கும் நாக சாமியை எப்படி ஊரைவிட்டு ஓடச் செய்யலாம் என்று ஜமீன்தார் யோசித்தார்.

வைத்தியரை ஊரைவிட்டு நேரடி யாக விரட்டினால் ஊராரின் கோபத் திற்கு ஆளாக நேரிடும் என்று யோசித்தார். நாகசாமி தானாகவே ஊரைவிட்டு ஓடும்படி செய்ய வேண் டுமெனத் தீர்மானித்துக் கொண்டார்.

ஒருநாள் நாகசாமி தன் குடும் பத்தோடு வெளியூர் சென்றதைக் கண்டார். அவன் அன்றிரவு வெளி யூரில் தங்கிவிட்டு மறுநாள் தான் திரும்பி வரப்போகிறான் என்பதை ஜமீன்தார் அவனிடமே கேட்டுத் தெரிந்து கொண்டார். இதுதான் நாக சாமியை ஒழிக்க சரியான தருணம் என்று திட்டம் தீட்டினார்.

அன்றிரவே ஜமீன்தார் தன் ஆட்களை நாகசாமியின் வீட்டிற்கு அனுப்பினார். அவர்கள் சுவரில்

- திருச்சி தங்கராசன் -

கன்னம் வைத்து உள்ளே நுழைந்து நாகசாமியின் மருந்துப் புட்டிகளை யெல்லாம் உடைத்தெறிந்தனர். தைலங்களையெல்லாம் கொட்டி னார்கள். சூர்ணம், வேர் போன்ற வற்றை எல்லாம் நெருப்பில் போட் டனர். ஆக அந்த இடத்தில் மருந்து என்பதே இல்லாதபடி எல்லாவற் றையும் அழித்து நாகமாக்கிவிட்டு வந்த வழியே போய்விட்டனர்.

மறுநாள் காலை நாகசாமி வந்து பார்த்தபோது தன் மருந்துகளெல் லாம் நாசமாக்கப்பட்டிருப்பது கண்டு அதிர்ச்சியடைந்தான். உடனே வீட் டிலிருந்து இன்னும் என்னென்ன பொருட்கள் திருடப்பட்டுள்ளன என்று பார்க்கலானான்.

என்ன ஆச்சரியம்! மருந்துகளைத் தவிர அனைத்துப் பொருட்களும் அப்படியே இருந்தன. நாகசாமி தீவிர யோசனையில் ஆழ்ந்தான். இவ் வளவு தூரம் சுவரில் கன்னம் வைத்து உள்ளே நுழைந்த திருடன் வீட் டிலுள்ள பணம், விலையுயர்ந்த நகைகள் மற்றும் பொருட்கள் என்று எதையும் எடுக்காமல் மருந்துகளை மட்டும் நாசம் செய்துவிட்டுப் போனது ஏன்? இதில் ஏதோ சதி இருக்கிறது. எனக்கெதிராக வேண்டு மென்றே யாரோ இந்த வேலையை செய்திருக்கிறார்கள் என்று அவ னுக்கு விளங்கிவிட்டது. ஆனால் அப்படிச் செய்தது யாரென்றுதான் தெரியவில்லை. மேலும் தனக் கென்று எதிரியும் யாருமே இல் லையே என்று குழம்பினான்.



இதற்குள் வயல்பக்கமாகச் சென்ற ஜமீன்தாரின் மகனைப் பாம்பு கடித்து விடவே அவனைத் தூக்கிக் கொண்டு சில ஆட்கள் ஜமீன்தாரிடம் வந்தனர். ஜமீன்தாரரும் அவனை நாகசாமியின் வீட்டிற்குக் கொண்டு போகும்படிச் சொல்லி விட்டு தானும் கூடவே சென்றார்.

நாகசாமியும் ஜமீன்தார் மக னின் நாடியைப் பிடித்துப் பார்த்து விட்டு, ''அடடா! என்னுடைய மருந்து மட்டும் இப்போது இருந் திருந்தால் இவனை இப்போதே பிழைக்க வைப்பேனே! யாரோ ஒரு பாவி என் மருந்துகளையெல்லாம் நாசமாக்கிவிட்டானே. இப்போது என்ன செய்யலாம்?'' என்று யோசிக்கலானான்.

அப்போது ஜமீன்தார் ''நாகசாமி,

அந்தப் பாவி வேறு யாருமல்ல. நான் தான். உனக்குப் பேரும் புகழும் பெருகி வருவது கண்டு பொறாமைப்பட்டு, உன்னை ஊரைவிட்டு ஓடும்படிச் செய்ய இவ்வாறு செய்தேன்,'' என்றார்.

அப்போது நாகசாமி, ''இருங்கள், இதோ வருகிறேன்!'' என்று வேகமாக ஓடினான். ஜமீன்தாரும் மற்றவர்களும் நாகசாமி மனம் உடைந்து போய் அங்கிருந்து சென்று விட்டான் என எண்ணினர்.

ஆனால் நாகசாமி சற்று நேரத்திற்கெல்லாம் ஏதோ ஒரு பச்சிலையை எடுத்து வந்து அதனைக் கசக்கி சாறு எடுத்து அதனை ஜமீன்தாரின் மகனின் மூக்கிலும் கண்களிலும் விட்டான்.

சிறிது நேரம் கழித்து ஜமீன்தாரின் மகன் சுயஉணர்வு வந்து எழுந்து உட்கார்ந்தான். பாம்பின் விஷம் இறங்கி, ஆபத்தான கட்டத்தை தாண்டியாகிவிட்டது. இனி அபாயமில்லை என நாகசாமி ஜமீன்தாரிடம் கூறி, அவனை வீட்டிற்கு அழைத்துப் போகலாம் எனக் கூறினான்.

அப்போது ஜமீன்தார் ''நாகசாமி, நீ மனிதருள் மாணிக்கம். நான் மருந்துகளையெல்லாம் நாசமாக்கினேன். அதை எல்லாம் மனதில் வைத்துக் கொள்ளாமல் எங்கோ சென்று பச்சிலையைத் தேடிக் கொண்டு வந்து, பாம்பு கடித்த என் மகனுக்கு வைத்தியம் செய்தாயே! இந்தப் பெருந்தன்மை யாருக்கு வரும்? நீ இந்த ஊரிலேயே தான் இருக்க வேண்டும். எல்லோருக்கும் வைத்தியம் செய்ய வேண்டும். உனக்கு நானே எல்லா வசதிகளையும் செய்து கொடுத்து, நீ இழந்த மருந்துகளுக்கு நஷ்டஈடு கொடுக்கிறேன். அது மட்டுமல்ல. நீ இனி புதிதாகச் செய்யப் போகும் மருந்துகளுக்காக ஆகும் செலவையும் நானே ஏற்கிறேன்,'' என்றார்.

நாகசாமியும் ஜமீன்தார் கூறியதை ஏற்றுக் கொண்டான். ஜமீன்தாரும் திருந்தி புதிய மனிதனாகிவிட்டார். அவரும் எல்லோரையும் போல நாகசாமியைப் புகழ்ந்தும் பாராட்டியும் கொண்டாடியும் வரலானார்.



அம்புலிமாமாவின்
அன்புளிப்பு

# வீர தீர பராக்கிரமன் 16

ஓவியம் : பாணி

நெருங்கிய நண்பர்களுடன் சேனாதிபதி நரேந்திரதேவன் மலைக் கோயிலுக்கு வந்த பிறகு அவனது கர்வம் அழிகிறது. தாந்திரீகன் அவனை விழாவைக் காணும்படி கூறுகிறான். பாம்புடன் நின்ற நாகபந்துவின் பக்தர்கள் திடீரென்று அலறியபடி கீழே விழுந்தனர். தவறு நடந்துவிட்டது என்று தாந்திரீகன் விழாவை நிறுத்துகிறான். அவனுக்கு எதிரியாக இளைஞன் கருடன் முளைத்தான்.

தனது குருவைத் திருப்திப்படுத்த பெண்களையும் ஆண்களையும் பலி கொடுத்ததை மாந்திரீகன் விளக்கினான்.

என்ன, கருடன் உனது விரோதியா?

ஆம்! முன்பே ஐம்பத்தொன்பது கருடன்களைப் பலியாக்கி இருக்கிறேன். அவர்களிடம் கருட ரேகை இருந்தது. இறுதி பலி கிடைக்கவிருந்த தருணத்தில் என் முயற்சி தடைபட்டு, அவன் தப்பிவிட்டான்.


தாந்திரீகன் சொல்லைக் கேட்டு நரேந்திரதேவன் ஆச்சரியப்பட்டான்.
இந்த அறுபதாவது பலி உன் நாட்டிலுள்ள அந்த இளைஞனாக இருக்க வேண்டும் என்பது என் குருவின் ஆசை போலும்.
என்னை அந்த இளைஞனிடம் கூட்டிச் செல். அவன் பெயர் ஆதித்தன். எனது விரோதி மூலம் ஏவப்பட்டவன் அவன்.
ஆதித்தனா?


நரேந்திரதேவனின் முகத்தில் புன்னகை மிளிர்ந்தது.
யார், என்ன என்று இப்போது புரிகிறது.
ஆதித்தன் மலையின் மறைவிடத் திற்குச் சென்றான். வீரபாகுவும் அருணாவும் அவனை வரவேற்றனர்.
கவலையோடு உங்களைத் தான் எதிர்பார்த்துக் கொண்டு இருக்கிறோம்.
நீங்கள் உடனே மன்னரைக் காணச் செல்லுங்கள்.


மன்னர் நகரில் ஏற்பட்டுள்ள மாற்றங் களால் கவலையுடன் இருந்தார்.
நிலைமை இவ்வளவு மோசமாக இருந்தால் நாம் நிச்சயம்...
சீக்கிரம் தலைநகரம் செல்ல வேண்டும். அரண்மனையில் விசுவாசமுள்ள பாதுகாவலர்களை நியமியுங்கள்.
மன்னா! அரண்மனைப் பாதுகாப்பு அனைத்தும் நரேந்திரதேவனின் வசம் உள்ளது.


விசுவாசமானவர் களை நாட்டைவிட்டு விரட்டியுள்ளார்கள். கைதி களாக்கி உள்ளார்கள்.
என்னுடைய கருத்து நீங்கள் அதுவரை தலைநகரம் செல்லக் கூடாது. நரேந்திரதேவனும் ரவீந்திரதேவனும்...


பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த அருணா குறுக்கிட்டாள்.
தூதர்களிடம் இருந்து வீரபாகு வுக்கு ஒரு செய்தி கிடைத்து உள்ளது
அவனை உள்ளே வரச் சொல்!
மந்திர தந்திரத்தால் மன்னரைத் தன் வசப்படுத்த ஒரு தாந்திரீகனை நாடப் போவ தாகக் கூறிக் கொண்டு உள்ளான் சேனாதிபதி.
இன்னும் எதற்காக?
உங்களைக் கொல்வதற்காக.


அந்த தேசத் துரோகியை சிறையில் அடைத்து மக்களின் முன் தூக்கில் இட வேண்டும்.
இல்லை! நான் அரண்மனையில் தான் இருப்பேன். மக்களே என் சக்தி! அவர்களைப் பிரிந்து இருக்க மாட்டேன்.
தங்கள் விருப்பம் மன்னா!
அவர்களை நகரப் பகுதியில் வசிக்கும் படி ஆதித்தன் யோசனை கூறுகிறான்.


சதிகாரர் களுக்கு எதிராகத் திரண்டு நிற்கும்படி மக்களிடம் சொல்வேன்.
அவர்கள் முன்னிலையில் என்னுடைய விதியைச் சந்திப்பேன்.


வீரபாகு! நீ முதலில் சென்று நான் விரைவில் தலைநகரம் வருவதாகத் தெரிவி!
ஆகட்டும், மன்னா!


வீரபாகு! மன்னருக்காக நல்ல பாதுகாவலர்களை ஏற்பாடு செய்!


மன்னா! நான் முதலில் சென்று உங்கள் வருகையைத் அறிவிக்கிறேன். அருணா உங்களுடன் வரட்டும்.
மன்னரையும் தேசத்தையும் துஷ்டசக்திகளிடமிருந்து நான் காப்பாற்ற வேண்டும்.
தொடரும்

## கேளிக்கை நேரம்

நீங்கள் ஆர்வமும் துடிப்புமுள்ள சிறுவர்களா?
இதோ உங்கள் மனதை மகிழ்ச்சியில் ஆழ்த்தும்
சில விளையாட்டுக்கள். ஜமாயுங்கள்!

### பறக்கும் பிசாசு

***இந்த அரக்கன் நிறைய உயிரினங்களை விழுங்கிவிட்டான். அவை என்னென்ன என்று உங்களால் கூற முடியுமா?***

### கண்டுபிடியுங்கள்

I



இந்த இரு படங்களும் ஒன்று போல் இருந்தாலும் இவற்றுக்கிடையே எட்டு வித்தியாசங்கள் உள்ளன. கண்டுபிடியுங்கள், பார்ப்போம்!

II



இவை உங்கள் ஆக்கத்திறனையும் கூர்ந்து நோக்கும் திறனையும் சோதிப்பவையாக அமைந்துள்ளன.

## வரைகலை

இதோ இந்த எளிய வடிவமைப்புகளைக் கொண்டு சுலபமாக ஒரு மீனை நீங்கள் வரைந்துவிடலாமே!



## நாய்க்குட்டியின் குழப்பம்

நாய்க்குட்டிக்கு மீனா பாப்பாவிடம் போக வேண்டும். ஆனால் வழியிலே பயங்கரமான உருவங்கள், பாதை வேறு குழப்புகிறது. நீங்கள் தான் அதற்கு வழி காட்டுங்களேன்!



## ஒரே கோடு = படம்

ஒரே கோட்டில் கையெடுக்காமல் இந்த வண்ணத்துப் பூச்சியை வரைய முடியுமா உங்களால்? பார்க்கலாமே உங்கள் திறமையை!






# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/–
போட்டி முடிவு செப்டம்பர் 2002 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்

மே 2002 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர் :
**இரா. வியாஸ்**
பாக்யா நிவாஸ், . S-2, 2-வது தளம்,
. A-20, 100 அடி சாலை, இந்து காலனி,
நங்கநல்லூர், சென்னை - 600 061.

பரிசு பெற்ற வாக்கியங்கள்



கோடையைத்தணிக்கும் தண்ணீர்
தாகத்தில் இனிக்கும் இளநீர்

## கேளிக்கை நேரம் - புதிர்களுக்கான விடைகள்

கண்டுபிடியுங்கள் : 1. சங்கீதக் குறியீடு, 2. சிறுமியின் ஆடையிலுள்ள புள்ளிகள், 3. சிறுவனின் சட்டையிலுள்ள பாக்கெட், 4. பறவையின் சிறகு, 5. சிறுவனின் வாயில் பல், 6. நாயின் மீதுள்ள திட்டு, 7. பூச்சாடியிலுள்ள புள்ளி, 8. பறவைச் சிறகின் ஒரு குறியீடு.

பறக்கும் பிசாசு



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

